# முகவுரை.

---

அறுசீர்க்கழி நெடிலடி ஆசிரிய விருத்தம்.

---

சென்னையிற்சிறந்த நீதி செலுத்தியவந்தணாளன்
கின்னரிநாதவேத கீதகோவர்த்தனம் சேர்
சென்னெறியாளன் சேஷகிரியெனு நாமநல்லோன்
சொன்னதோருறுதியேந்திச்சோதரர்க்களிப்பாமாலை

---



ஸ்ரீ பரப்ரஹ்மணே நம:

# முகுந்தமாலை.

## எழுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.

1. மலர்மகள் மணவாள மருள்செய் சம்சாரவேர்
மண்ணொடு மழிக்கநின்றோய்
உலகெலாமளித்ததற் குண்ணிறை பூதமாய்
உரக நற்சயனமானோய்
நிலவு மன்புடை பக்தவத்ஸலா வரதனே
நேர் தயாபரனே யென்றும்
பலவதாமுன்னும படனமே யெந்நான்றும்
[illegible]

2. தேவகி களிக்க வரு தேவ தேவனுமான
திவ்ய கோமளனே வாழி
பூவினது பாரமே பொன்றிடவெழுந்தருள்
புண்ணிய முகுந்த வாழி
மேவிய விருப்பமதை மேன்மைபடவே பொழி
மேகவண்ணனே கண்ணவாழி
கோவலர் குலமணி விளக்காகி நின்றதோர்
கோபாலகிருஷ்ண வாழி.

3. தலையினை வணக்கியுன் தாளதிற் பணிந்துமே
தருவாயென் றேம்பலானேன்
நிலையிலா யாக்கையை நீத்து மெத்தனை சென்மம்
சேர்படினு முன்றன்பாத
மலரினை மறவாது மதியிடை யிருத்தவே
மகிழ்வுடன ளித்தருளுவாய்
பல பொருள் கடிந்துமுன் பற்றதை யடைந்தோர்க்குப்
பதமருள் முகுந்தமாலே.

4. சுகதுக்க நிவாரணத் தோற்றமதனைக்கொண்டுன்
சோதிசேர் திருவடியினை
அகமுற வணங்கவில்லை ஆழ்குரும்பி பாகமாம்
ஆற்றொணா நரகமதையான்
இகழவும் சேரவில்லை இந்திராணுப்பான
ஏர்கெழு மரம்பை மாதர்
சுகம் பெறவு மன்றுன்றன் சோர்விலாத் தியானமென்
னும் சன்மம் சொனலேவ முகுந்தா.

5. தருமசாதனமொன்றும் தாகிக்க வில்லையான்
தருபொருள் வேண்டவில்லை
ஒரு காம போகமும் ஒம்பினேனில்லை யான்
ஊழ்வினையி னுளதெல்லாம்
வருகவென்றே கொண்டேன் சென்மசென்மாந்தரம்
வழுவாதவுன்றன் பத்தி
பருகவே உன்னிணைப் பாதவம் பொருகப்
பற்றதென் னார்வமுகுந்தா.

6. தபனம் செய் நரகிலோ தாழ்பூமி தன்னிலோ
தங்குவேன் சுவர்க்கமதிலோ
கபவாதபித்தமய கால வந்தத்திலும்
கார் தோன்று மம்புயத்தின்
நிபம் வென்ற வுன்னிணைப் பாதத்தினிலேசிந்தை
நிட்டையை விரும்பினேனால்
அபரிமிதவலிகொள் அந்த நரகன்றனை
அழித்தருள் முகுந்தமாலே.

7. உடலினையகன்றுயிர் ஓடுமக்காலையில்
உன்சுமரணை எங்ஙனேபோ
கடைப்பித்த கபவாத மனைத்துமே யென்றனற்
கண்டத்தைக்கட்டுமன்றோ
மடாராச ஹம்சமென் மனதுமுன் றிருவடி
மரைக்கூட்டினின்றேயமா
இடையர் பாடியில் வந்து எழுந்தருள் கண்ணனே
எண்ணினேன் சாலவேண்டி.

8. மந்தகாசமுகார விந்தனா யன்பர்தம்
  மனமே கொண்ட துன்பமொழியிலே
தந்து நாரதமா முனிகனாதி தபோதனர்
  தலைவணங்கியே தியானஞ்செய்
நந்தகோன் சுதனாகியும் பராத்பரனா
  நாரணனைச் சந்ததமுமே
சிந்தையிற் கொடு பத்தி செய்வதே யாகின்ற
  சித்திமுத்தியொடு நின்றேனான்.

9. பரிசனமெனும் பாசப் பாலைவன மேவியே
  படுதுயருழன்றதெல்லாம்
கரசரண பங்கயம் செங்கணாலு மீனுமே
  கலந்தமே தானிலைகளுடனும்
அரியெனும் சரசிமேல ஆழ்ந்துடனே நானடி
  அங்கந்நீர் பருகலாகித்
திருகியே யின்றொடும் தீர்த்திடுவன் தாபத்தைத்
  திகைத்திடனம்மானே.

10. சரோருக நயனமும் சங்குசக்கரக் கையும்
சார்ந்த அக்கண்ணனென்னும்
முராரியை யல்லாத முதன்மைசேர் பொருளுண்டோ
மும்மையாம் காலத் தென்றும்
பராவியே பருகுதற் கேற்றநற் பாற்கடற்
படிவதா மமுதம்வேறே
நிரந்தரம் விடாமலே நிலையதாய் நெஞ்சமே
நினைத்திடா யவனை நீயே.

11. பாபமெத்தனைகோடி பண்ணியபட தண்டத்தைப்
படைத்தனே னென்றிடாது
மாபத்தி சலபமும் மாலெனுகாரணனையே
மறவாது தியானம் செய்வாய்
சோபத்தி லமர்ந்திடேல் சோர்வதையே கொண்டிடேல்
சுழல்மூட வென்றன் நெஞ்சே
ஆபத்திலுலகோரை ஆதரித்தருளுமவன்
அடியாரைக் காத்திடானோ.

12. புண்ணியமுடன் பாபப் புயலதைக்கூடியே
புலனெனும் உதகம் சேரும்
மண்ணிடைக் குடும்பமாம் மாசாகரம்பட்டு
மனைமக்கள் மற்றுளோரை
எண்ணியே காப்பமை ஈடிலாப்பாரத்தை
இகமுலாம் வகையுமொன்றே
அண்ணலாம் அரியெனும் அத்தெப்பம் பற்றியவ்
வார்கலியகன்று செல்லாம்.

13. கரையிலாக்கடல் போலக்காணு சம்சாரமதைக்
கடத்தலரிதாகு மென்றே
வெருளுறேல் நெஞ்சமே வேணுகோபாலனா
விந்தநேர் கண்ணனை
முராரியைப் பற்றியே முதன்மை சேர் பத்திகொடு
முறையுடன் தாண்டலாகும்
பாரினியே நின்ற பவமயமான சமுசாரப்
படியிலாச் சாகரத்தை.

14. மதனனும் பவனத்தால் மண்டியெழு போகமாம்
மாவலைகொளாசை நீரும்
சுத சகோதாரெனும் சூழ்காரக் கலக்கிடச்
சுழலாகத் தாரமோடாம்
உத்திசம் சாரத்து ளழுந்தியா முழல்வதை
யொழிக்கவுன் பாதமலரின்
பதிவிசேர் பத்தியெனும் பற்றோடம் தந்தருள்
பதமூன்று கொண்ட வரதா.

15. உமதடி மனைதனில் ஒருகணப் போதுமே
உள் நிறை பத்தியற்றோர்
தமதுமுக நோக்கிடேன் தாழ்த்தியே செவிதனைத்
தந்திடேன் திவ்யசரிதம்
உமதுமே யில்லையேல் உத்தமா வுமைநிந்தை
உரைப்போரை மனத்திலெண்ணேன்
அமருவே னெஞ்ஞான்றும் அகில செகதீசனே
ஆராதன முன்னைச்செய்தே.

16. கண்ணனைக்காணுவீர் கண்களே கரங்களே
கபலையை பார்பிற்கொண்ட
அண்ணலே யாராதிபுமடி காளவன் கோயில்
அடைகுவீர் அய்யனாவே
புண்ணிய அவன்காதை புகலுவாய் நெஞ்சமே
போற்றிநீ சிரமே வணங்காய்
பண்ணமை முராரி கேசவ முகுந்தன்பாதம்
படைதுள பாரசிமுகராய்.

17. செனன மரண நோயைச் சேதனம் செயவரு
சிறந்தநேதார் கிருஷ்ணமிருதம்
மனமுறப் பருகிடும் மருந்து மற் றில்லையென
மாயோக யாக்யவல்க்யர்
இனத்தராமிருடிகள் எடுத்துரை இப்பற்றதே
எங்குமோர் சோதியாகி
நினைத்தறிய வாகாத நிகரிலாக் கண்ணனவி
நித்யானந்த மோட்சவழியாம்.

18. ஆபத்தினைக்கொண்ட ஆர்கலிச் சம்சாரம்
 ஆழ்ந்துமே யுழல்யாந்தர்காள்
மாபரம ஹிதமொன்று மட்டுடன் சொல்லுவேன்
 மதித்தக்கவை சேரலாகும்
தாபம் வேறகற்றியே தாழ்ந்து பிரணவம்சேர்
 தழை நமோ நாராயணாய
சோபித நாமத்தைச் சோர்விலாதெடுத்தோதிச்
 சூழ்கடல் கடப்பதேயாம்.

19. உனது பேர் மகிமையின் உத்க்ருஷ்ட நிலைநோக்கில்
 ஒரு ரேணு வாகு முலகம்
புனலெனும் பூதமும் புன்றிவலையொக்கும்
 பொறிபொன்றே யாகுமேயு
கனவாயுவென்பதும் கடைச்சுவாசம் போலாம்
 ககனமும் புழைபோலாமால்
பனிமலை மகளைதன் பழிப்பில் பிரபாதிகள்
 பல்கிருமி யொப்பர் ஜகந்தா.

20. சரோருகாட்சவோ சந்ததமு மெம்மனோர்
சரணார விந்த முனதே
பராவியஞ்சலி பாணியும் பணித்திடு
பரயானந்த நேத்திரமுடன்
உரோமம் பொடித்திடும் உடலமு நடுக்குறு
உன்னனுபவக் கண்டமோடும்
இருந்திடு மின்னிலை யமுதமெஞ்ஞான்றுமே
இன்புறப் பருக வருள்வாய்.

21. கோபாலகிருஷ்ணனே கோபிசன நாதனே
கோடுடைக் கஜேந்த்ரன் கூவ
ஆபத்தகற்றின ஆர்கலிக்கருணையோய்
அமுதமுடனுததி தோன்றும்
சீபதியாகவே வரிராம அனுசனே
சிற்றிடைத் திருவின் மாலோய்
மாபார திரிலோககுரு கஞ்சவந்தகா
மதித்தெமைக் காத்திடாயே.

22. பத்தரைப் பிடிக்கும் பாம்புகொல் கருடமணி
பாலித மூன்றுலகமணியே
சத்திகோபியர் நேத்ர சாதகாப்புத மணியே
சவுந்தரியத்தின் முத்ராமணி
அத்தை காந்தாமணி அணியுருக்மிணியின்குச
அணியெனவே அமையுமணியே
சித்திதா தேவ சிகாமணியுமானவனே
சீர்கொள் கோபால சூடாமணி.

23. சத்துருகளைந்திடும் சாரமந்திரமாகிச்
சதுர்மறை புகழ் மந்திரமுமாய்ச்
சத்திகொல் சமுசார சாகரத்தெப்பமாய்ச்
சருவைசுவரிய நேருமந்த்ரம்
அத்துக்க ஆரணிடம் அஞ்ஞான விருள்கடி
ஆன்மனீடேறு மந்திரமாம்
சித்திசேர் சீ க்ருஷ்ண சிவமந்திரமதைச்
செபி சததம் நாவே செபிநீ.

24. போகபோகந்தனைப் போக்குயர் மருந்தது
புண்ணிய சனகாதி முனிவர்கள்
யோகினிலமர்ந்திட உதவிடுமருந்தது
யுக்த அசுராதிகடிமருந்து
நாகமுதல் மூவுலகுஞ் ஜீவநமருந்தாய்
நாசபவபய மருந்துமாம்
பாகவத ஹிதமதைப் பருகிடு நெஞ்சமே
பாலக்ருஷ்ண ஜீவாம்ருதமதை.

25. வேத அத்தியயனமும் விபினத்தில பூதலாம்
விரத்திடுபவாசவிரதமும்
[illegible]துடல் குறைக்கவரம் உதவலூன் சாலையும்
உதகநிறை தடாகமோடு
பூதியிற் பெய்திடு ஆகுதிபோலாரும்
புண்ணிய தீர்த்தத்திலாடல்
போதகஸ்நானமாம் போற்றல் நாரணனையே
புரிந்திடாப் புரிவிலார் தமக்கே.

26. நாராயணனென்ற நாமமங்களமதை
நாவினுற் சாற்றினோரும்
பூரிபாரனும் புணர்ந்திடவில்லையோ
பொருளவர் விழைந்தவாறு
நாரியர் கருப்பத்தில் நாமுமன்றதுவெலாம்
நற்றிரு நாமமதனைச்
சிறுறமுன்னதாம் சென்மத்திலெக்காலும்
செய்யாத குற்றமன்றோ.

27. உன்னடிமையடி யாழியன் பணியாளின்
உறு பண்ணைக்கு மாளினாய்
என்னையுன்றிருவுளம் ஏற்று நீ கொண்டிடல்
என்னுடைச் சென்மபலனும்
உன்னையான் வேண்டுவது மிதலால் வேறில்லை
உத்தம உலகநாதா
என்னுடை விழைவினை நன்றருள் அப்பனே
ஏமதுகையடியாசே.

28. புண்ணியனாரணன் புருஷ ஸ்ரேஷ்டனும்
புகல் மூன்று லோகபாலன்
அன்னவன் விலையில்லா அருளுருதனகமதால்
அழைமடைவுடன்னைவிட்டு
கன்னுகள் ஞாலமாம் கவிகைகளாழ் வொன்றுமே
காட்டமை யரசன் றன்னைப்
பன்னிரு வையர்போ லோடி காம்பணிவது
பழிவிங்கை பாவதன்றே.

29. முன்னம் நீ முக்கண்ணன் முகமுறையங்கியால்
முடிந்துமே யணக்குறுப
இன்னுமென்மனமதில் இருக்க நீ தகாதென்று
என்னுமதற் கிடமில்லையா
உன்னத முருகன்றன் மலருமென் றுள்ளத்தை
உறையுளா யேற்றரிக்க
அன்னவம் மூரிகை ஆழியின் றிறமதை
அறிந்திலையோ மாரீயே.

32. ப்ரிபோதறி வருமகன் பதியு நீயாகினை
பதுமனு ன்றனைபனுறுன்
தியானமே செப்வன திவ்விய மறைகளை
தேவகணமுன்னடிமைதான்
வபம்தா யுலகினை வைப்புதன்மாயையே
வலாரிசுத னுன்றனன்பன்
தயைமோட்ச முன்னதே தாய் தேவகிதேவி
தருமபா மாத்மன் வேறே

33. உலகெலாமளித்தனை உன்னுளே கொண்டனை
உய்பவனு ஞானங் களைவோய்
பலர்பணியமார்தம் பகையினைபகற்றினுய்
பணிவின்றே னெமர்க்குமாக
குலவியே காத்தருள் கோபாலகிருஷ்ணனே
குற்றமெம் பாலகற்றி
நிலைத்துமே பணியுமின் எம்மனோரவனேர்
நின்றவன் அடிமையானேன்.

34. ஏடுத்தோதும் சாத்விக குணகளு
ஸர்வகாருண்ய புருஷோத்தமா
விதமூன்று கொளுமல விகந்துமே நின்றவா
விஷ்ணுவேபத்தர் துக்கஹரியே
அதிமோகஸம்சார ஆர்கலிநின்றெனை
அக்கரைசேர்க்க நீயின்றியார்
அதுவொன்றே வேண்டினேன் அறிந்திலேன் பறிவேறு
அறுதனெனை நீகாத்தருளவா.

35. நாராயணதத்வமுன் காட்டியே நாவினால்
நந்தவில் நாமமதனைப்
பாராயணம் செய்து பாதவம் புயமலர்
பற்றி நான் பணிந்துமவனை
ஆராதனம் அர்க்ய பாத்யாசமனமுடன்
அருச்சனை செய்துபற்றி
நாராயவன்றனை நிலியுட னெஞ்ஞான்றும்
நிட்டையிற் போற்றல் வேண்டும்.

36. சாகமொழியாம் சீர்கொண்டகலமுற்ற
சீபதீ ஸ்ராபணுவே
ஏராம வசுதேவ சுதனே ஏக்ருஷ்ண
ஏ சக்ரதரமுராரி
ஏரார் செழுங்கமல நேத்திரத்தொருவனே
ஏ பக்தவத்ஸலனேவா
த< நீருண்டகார்வண்ண நின்மலா ஏ ஹரே
நிரந்தரமுனைப் பணிகின்றேன்.
37. துக்கமேதரவரும் தோஷமாம் விஷயத்தில்
துணிவுடன் ஏனேமார்கள்
நிறகலாம் வித்தையே நினைத்துமாதவவென்றும்
நீலமேகனே கண்ணவென்றும்
அற்புத முகுந்தனே அனந்தவைகுண்டனே
அருள்புரி கோவிந்தவென்றும்
ப சொற்பணிதொண்டிமே சோர்விலதணிசெய்து
சுகம் பெறஇருந்தலர்தோ.

38. இதயவிரும் கமலத்தில் இடைவிடாதிருப்பவன்
எங்கணு நசிப்பிலாதான்
பதவேகமே கொண்டு பஞ்சேந்திரியங் களை
பரமருமுட் கக்களுக்கு
இதமுளபயபத்தை எஞ்ஞான்று மீன்றுமே
எல்லையுங் கடந்த நின்றோன்
வேத விந்துதனைப்பணி பற்றறுதவரவன்
பரமபதமே சொல்வர்தாம்.

39. பயோததியிலுத்தனி பெறும் தாரகைமொய்க்கப்
பாங்குகொள் திருமேனியோடும்
புயங்கமாம் பாயலிற் போக போத நித்திரை
புரிகின்ற மதுசூதனை
நயமுடன் கருணைசேர் நயனபங்கயமகன்
வரதனும் என்றன்னிலேதான்
கிரமமுடனொபுன நித்திய விரதமாய்
நின்று காலடி பணிகின்றேன்.

40. வேதார்த்த மோர்ந்[illegible]டித்தரித்துமே
வியன்கலிச் சிரேட்டாரும்
மேதகுதவிசன்மவார் பத்மசரோன்றும்
மித்திரர் படைத்தாரும்
சேறுபுண்டரீகாட்சன் சுத்தமாமடிமலைச்
சூதமாம் குலசேகரவிறை
ஓதினவிக்கீர்த்தமதை புலவிதுன்னோர்
உணர்ந்துமே அரியை வணங்க.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

41. என்றவனுரைத்தமாற்றம்
எடுத்துரை மேலோர் நீட்ட
நின்றமைதபுணர்ந்துபின்னும்
சேர்ந்தனன் தமிழ்ப்பாமாலை
ஒன்றதாம் பிரமமுன்றுப்
உறுதேற்ற முகுந்தமுதலை
என்றுமே பணியுமாறு
இராசகோபாலனென்பான்.

முற்றிற்று.

ஸ்ரீமதே ராமானுஜாய நம:

ஸ்ரீகுருவேநம:

சுந்தராநந்தசுவாமிகள் பேரில்

# இலக்ஷணவிருத்திப் பதிகம்.

---

இஃது

திருத்துருத்தியென்னும்

திருப்பதியின் கண்ணெழுந்தருளிய இந்திரபீடம்

**கரபாத்திரசுவாமிகளென்னுஞ்**

சதாசிவப்பிரம்மேந்திர யோகீஸ்வரர் ஆதீனம்

செய்யூர்

**பரமானந்தசுவாமிகள்**

மாணாக்கர்

**ப. ரூபதுங்கவேலையராலியற்றி**

ஷை ஆதீன. சாருபானந்தசுவாமிகள்

மாணாக்கராகிய

**தி. அப்பாசாமிமுதலியாரவர்களால்**

பார்வையிடப்பட்டு

சென்னை

மிமோரியல் என்னும் அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

# விளம்பரம்.

---

இப்புஸ்தகம் வேண்டியவர்கள் சென்னைமா--ராம் பெத்துநாயக்கன் பேட்டை தியாகராயபிள்ளை வீதியில ௭-வது கதவிலக்கமுள்ள வீட்டிலிருக்கும் அத்துவைத சிரவணானந்த பங்கஜன யையாரிடம் பெற்றுக்கொள்ளலாமே.

இதன் விலை அணா ௧.

ஸ்ரீகுருவேநம:

சுந்தரானந்தசுவாமிகள் பேரில்

# இஷ்டகுருவிருத்தப்பதிகம்.

## விருத்தம்.

கருது * நிர்விகாரன்கோசபல்விருத்தி
கடந்துணர்ஞானஸ்வரூபன்
காண்பெறும்அசலகன்சுயம்பிரகாசன்
களையிலாச்சுவப்பிரகாசன்
சரதமாகிலகும்ஆநந்தரூபன்
சத்தியன்சாற்றுநிஷ்கிரியன்
தகைமிகுமுத்தன்அகர்த்தாஅபோக்தா
தகுநிருபாதிகன்சாலக
இருமைநிர்லேபன்நிர்ச்சம்பந்தன்நீர்
நிளர்தருகூடஸ்தன்யாது
கிரியையுமிறந்துசலனமற்றுளதாக
கிட்டரும்ஆத்துமாவென்றும்
அரியபேரின்பரூபசாட்சியினிம்
இலங்கும்அந்தணர்கள்சொற்கவையே
[illegible]ருபவர்க்கிரந்தக்கட்டலாயவந்தச
சுந்தரானந்தசற்குருவே. (௧)

பங்கயனாதியமரர்கடுதித்துப்
பகரரிதாகுநிர்த்தோஷன்
பல்லுயிர்க்குரிய அப்பிரமேயன்
பாருயிரொளவையினும்பயக்கும்
சங்கைதீரும்பிரத்தியக்ஷன்பேர்
கருமஅணுமெய்யறிவுடையோர்
பந்தகஞ்சாருந்தத்வவாராய்ச்சி
தனில்அசரீரியாக்காணும்
துங்கநிரிந்திரியன்அப்பிராணன்
[illegible]ன்றியஅமனசுமாயை
தொடரும்ஆணவங்காமியமும்மலங்க
டுடைந்திடுநிருமலன்என்றே
சொரூபமாதவர்களாதினைந்துரிய
சூட்சியிற்கண்டெய்யாவெஞ்
சொருபவாநந்தக்கட்டலதாய்வந்தச்
சுந்தரானந்தசற்குருவே. (உ)

## இலஞ்ஞைவிருத்திப்பதிகம்.

சாதிவர்ணாசிரமத்தொடர்பிரிவின்
சம்பவமாகியுமனைக்குந்
தானென்னியமதாந்தசுத்தன்மெய்ப்புத்தன்
தழைத்திடுசெர்வக்ஞன்புனித
போதகநிறைந்தபரமானந்தன்மூப்
வனமெய்ப்புணர்மும்போற்றும்
பொற்புறுசம்புஅசலன்முக்குணங்கள்
பொதிந்திலாநிர்க்குணன்சருவ
பேதமுமப்பேதங்களுக்கன்னியம
பெருநிருவிகற்பன்எல்லாமாய்ப்
பிறங்கியுமவைகட்கன்னியமாயிருக்கும்
பெட்புறுநிராகாரன்பலவின்
தோதகமில்லாநித்தியமுத்தன்
என்றறைபோதிசெட்டருந்
சொருபவானந்தக்கடலதாய்வந்தச்
சுந்தரானந்தசற்குருவே.

## இலக்ஷணவிருத்திப்பதிகம்.

நீக்குதற்கரியதகைமைசேர் அபேத்தன்
நிரவயவன் அபரோக்ஷன்
நிகழ்வுறுமியாதோரேதுக்களின்றி
நிதித்திடுஞ்சுவயன் அகேயன்
ஆக்குதற்குரியதனி அநுபாதே
யன்றிகழ் அப்பிரவிர்த்தன்
அடர்ந்தவொன்றலொன்றவித்யமாமவஸ்தாத்
திரயப்பிரபஞ்சமூன்றற்கும்
போக்கிலாச்சாட்சியாகியெனாலாம்
பொருளத்துவிதசின்மாத்திரமாய்ப்
போந்தகற்பிவன்கற்பனாதனைகும்
போவர்நாள்போக்கிலா அமிர்தன்
துக்கமற்றவிருவிருப்பெலா அடிமை
துன்பங்கெடவிடுவந்தருளாய்
சொரூபவானந்தக்கடலமைவந்தக்
சங்கரானந்தசற்குருவே. (௫)

ஒப்பிலாச்சாங்கன்றேடுதற்களவி
லுண்மைசேர்அவியனற்சீர்த்தி
யோங்குறைபெருகுநித்தியாநந்தன்
உறுபரஸ்பரவிஷயங்கள்
கைப்படாதற்றகிர்விஷயன்மேற்
கருத்தெலாமுருக்கொடுகோணைக்
கருவியாம்புராணன்புதியதாயின்றி
காத்துகாண்டகுபுராதனன்மெய்ப்
பொய்ப்படுசூன்யன்சூனியஞ்சூன்யம்
போகியபுதைமஹாசூன்யன்
பூதப்பிரபஞ்சமொடுதிரிதேகம்
புகல்விசிட்டேஸ்வரம்இவைகள்
தொற்பெறுநாமல்லவென்பதால்விவர்த்தன்
அதிஅகருமனைவிளங்கும்
சொருபவாநந்தக்கடலதாய்வர்தக்
சுந்தராநந்தசற்குருவே. (௮)

தனக்குளவதையுந்தனையடைந்தவர்க்குத்
தான்றருந்தன்மையால்அலோபன்
சாற்றியஉன்னதன்அக்குரோதன்
சதாநிலைகெடாதவோர்நித்தியன்
கனக்கிருபைதிகழுஞ்சருவகெதன்
காணுதற்கிலசர்வாதாரன்
கருதுமாதாரமறுநிராதாரன்
கதித்திடும்ஆதிஅனாதி
அனைத்திலுநிறைந்தவிபுவொடுமகத்து
ஆய்ந்துநோக்கிடில்நிராஞ்சனன்பே
ரன்பினைக்கொள்ளைகொண்டிடுங்காரணன்
அகாரணன்சாட்சிந்தாணுவுடன்
தொனிப்பபோதுவாந்தசாந்தமாம்வெளியிற்
றிலங்குவோர்பரிபூர்ணன்என்றுஞ்
செரூபவாநந்தக்கடலதாய்வந்தச்
சுந்தராநந்தசற்குருவே. (எ)

---

இப்பதிகத் தவக்கச்செய்யுட் கண்ணதாகிய நிர்விகா ரன் என்னும் பதமுதல் அக்குரோதன் என்னும் பதம் வரை நிதித்தியாசன வுத்தி என்றறிக.

அயனரியரனுக்கரியவோர் அனந்தன்
அனைத்தினையுஞ்சமத்துவஞ்செய்
அருத்தமார்சர்வசமன்சர்வாதிஷ்டா
னன் இன்னகாலத்திலேயில்லை
இயைவுறுமின்னகாலத்திலுண்டு
விக்குண்டுவிக்கில்லையிவைதீ
திவைநன்றுவெனுமூவகையிலுஞ்சுட்டற்
றிலகியதன்மைசேர் அகண்டன்
செயலறும் அபரிச்சின்னன்மேலோராற்
செப்புதற்காயபேரின்பக்
திகழ்அறிவிரதன்னைப்பலமுறைநான்
சிந்திக்கவென்றருள்செய்த்தார்
அயராமாகியசங்கேதங்களீக்கித்
அணைப்பதநிலைதனைவைத்தருளாய்
சொருபவாநந்தக்கடலமுதப்[illegible]
சங்கராநந்தசற்குருவே

திரியவத்தையிற்காணப்படுமெல்லாச
செகமுஞ்சாட்சியினிடக்கண்டாய்
தேருஞ்சாட்சியினிவிருந்திலழிந்து
திகழ்சாட்சிமாத்திரமிருக்கும்
கருதுமச்சாட்சியாகியசருவ
காரணகாலத்ரயத்தும்
ககனம்போனிறைந்துநித்தியசுத்தாதி
யிலக்கணங்காண்பதானீயே
பிரம்மோடேகன்சர்வான்மாவென்றும
பெறற்கரிதாஞ்சர்வாகாரன்
பிறங்கியநேகரூபனென்றும்
பேச்சிறந்தொருநிலையான
துரியவதீதமகத்துகளிறைஞ்சுஞ்
சூட்சிநீகாட்சிதந்தருளகப்
சொருபவாநந்தகடவுளாய்வந்தச்
சுந்தராநந்தசற்குருவே. (௩)

---

நித்தியன் முதல் பிரமம்வரை சமாதியுக்தி யென்றறிக.

விளங்கியஏகரூபனேயென்றும்
விதிபரமார்த்தனேயென்றும்
விமலஞ்சேர் அத்துவைதனேயென்றும்
வீறுளவஸ்துவேயென்றும்
களங்கமில்நிஷ்ப்ரபஞ்சனேயென்றுங்
கருதுநாரூபனென்றுங்
கறையொறுத்திலகும்அபேதனேயென்றுங்
கழறுநிர்விசேஷனேயென்றும்
உளங்கனிந்திடுஞ்சர்வாபாவன்என்று
மொழிசர்வதோமுகன்என்று
முயர்பெரியோர்களோதுநற்றெட்டு
*விலக்ஷணநாமனேயுன்னை
துளங்கியமனப்பீடத்துள்வைத்திறைஞ்சி
தோத்திரித்திடவருள்புரியாய்
சொரூபவானந்தக்கடலதாய்வந்தச்
சுந்தரானந்தகுருவே. (௧௦)

---

* ஏகன் முதல் சர்வதோமுகன்வரை
சாக்ஷாத்காரயுக்தி.

சீர்மலிசிகடதநாட்டிறைவருடஞ்
சென்றபின்வந்தவாண்டதனிற்
றிரிவிலோசனன்வாகனமிருபத்தேழ்
திகதிசோமன்குலாதிபனாள்
வார்மலிபெண்ணைதனக்குங்கொங்குக்கும்
மத்தியிலுளதமழுடுவில்
வாய்ந்தபௌர்ணமியிற்சச்சிதானந்த
வாருதிசூழ்தரவயங்கும்
பேர்மலிதுரியாதீதபூமியின்கண்
பிறங்கரியாசனமௌன
பீடமீதென்றாழியுமெலாந்தானாய்
பெட்புகொண்டுதற்றுகச்சியினில்
தார்மலிபிறவியெடுத்துசென்னையினிற்
றலங்கியன்றாலைவைக்கியனை
சேர்குருபரானந்தகடலதாய்வந்தச்
சங்கரானந்தசற்குருவே. (கக)

சங்கரானந்தசுவாமிகள் பேரில்
இலக்ஷணவிருத்திப்பதிகம்-முற்றிற்று.

---

நித்தியாசன விருத்திக்கு வாக்கியம் எஉ.
சமாதி யுத்திக்கு வாக்கியம் உஉ.
சாக்ஷாத்கார யுத்திக்கு வாக்கியம் கச.
ஆக்கிரம் -- ந -- இ கூடிய வாக்கியங்கள் க0

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# சைவம்.

---

" அன்புஞ் சிவமு மிரண்டென்ப ரறிவிலார்
அன்பே சிவமாவ தியாரு மறிகிலார்
அன்பே சிவமாவ தியாரு மறிந்தபின்
அன்பே சிவமா யமர்ந்திருந் தாரே."

இக்கிவ்வுலகத்திலே பரந்து விரிந்து கிடக்கும் எண்ணிறந்த மக்கட் பகுப்பினராலும் எண்ணிறந்த வகையவாக வைத்து அநுசரிக்கப் பட்டுவருஞ் சமயங்கள் எண்ணிறந்தனவாய் இருக்கின்றன. அவைகளுள்ளே சைவசமயமும் ஒன்றாயிருக்கின்றது. நம்முடைய ஆராய்ச்சிக்கு எட்டிய மட்டில் உலகத்திலுள்ள எல்லாச் சமயங்களையும் சைவ சமயத்தையும் இரண்டுபக்கத்தே வைத்து நாம் நடுநின்று ஆராய்ந்து பார்ப்பாம். மற்றச்சமயங்களில் ஏதேனும ஒன்று சைவசமயத்தின்கட் காணப்படும் எல்லாக் கொள்கைகளையும் உடையதாய இருக்குமெனில், அது வேறு பெயரால் வழங்கப்படுமாயினும் கொள்கைகளிற் சிறிதும் வேறுபடாமையால் அதனையுஞ் சைவசமயமென்றே கொள்ளுதல் தவறு ஆகாது. உலகத்திலுள்ள எல்லாச் சமயங்களும் நேரே முழுமுதல் அறிவுப்பொருளாகிய கடவுளையும், அப்ப அறிவுடைய உயிர்களையும், அறிவில்லாத உலகத்து உயிரற்ற பொருள்களையும் ஆராயும் முத்திறப்பட்ட ஆராய்ச்சியில் அடங்குவனவேயன்றி, இம்மூன்றில் அடங்காத சமயம் இல்லையென்பது எல்லார்க்கும் ஒப்ப முடிந்ததேயாகும்.

உலகம், உயிர் என்னும் முப்பொருள்களையு

எழுந்த பல திறப்பட்ட கொள்கைகளும், அக்கொள்கைக
எல்லாவற்றையும் பற்றிய ஆராய்ச்சியும், அவற்றுட் பொரு
துவன இவை, பொருந்தாதன இவை, என்னும் பகுத்தறி
நிகழ்ச்சியும், பொருந்துவனவற்றைத் தெளிந்துரைத்
உண்மைமுடிபு காட்டுவன ஆகிய இவையெல்லாம் சைவ
தின்கண் விளங்கிக் கிடக்கின்றன.

முதலாகக் கடவுளைப்பற்றி ஆராய்ந்தறிந்த வகை
லும் அம்முழுமுதற்பொருளுக்குப் பெயர்வைத்து வழங்கும்
முறையிலும் சைவசமயத்திற்கும் பிறசமயங்களுக்கும் உள்ள
வேற்றுமையைக் காண்பது அறிவுடையோர் கடனாகும்.
அற்ப அறிவு உடையனவாய் உலகத்தின்கண் காணப்படும்
எல்லா உயிர்களும் துன்பத்தின் நீங்கி இன்பத்தைப் பெறும்
முயற்சி ஒன்றிலே மாத்திரம் அவாவி நிற்கின்றன. சிற்றறி
வுடைய உயிர்கள் அவாவும் இன்பத்திற்கும் பேரறி
வுடைய மக்களும் முனிவரும் அவாவும் ஆநந்தத்திற்கும்
வேறுபாடு காண்கின்றோம். ஆநந்தம் அறிவின் காரியமாய்த்
தோன்றுவதால், அவ்வாநந்தம் தனக்குக் காரணமாயுள்ள
அறிவின் தன்மைக்கு ஏற்பப் பெரிதாயுஞ் சிறிதாயும் நிலையுள
தாயும் நிலையிலதாயும் பலதிறப்பட்டுத் தோன்றும். இனி கற்
றோரினும் மேம்பட்ட முனிவரரோ உலகத்துப் பொருள்க
ளின் நிலையாமையினையும் சிற்றுயிர்களின் சிற்றறிவியல்பு
களையும்இனிதுணர்ந்து அவற்றின்கண் சிறிதும் பற்றில்லா
மல் எல்லாப் பொருள்களினும் பெரியதாய், உயிர்ப்பொருள்,
உயிரில் பொருள் என்னும் எல்லாவற்றினும் நுண்ணியதாய்,
எல்லா அறிவுகளினும் மேலானதாய்ப் பேரறிவினையுடைய
தாய், இங்ஙனம் பேரறிவுடையதாய் இருத்தலின் அவ்வறி
வோடு பேரின்பமும் உடன் நிகழப்பெறும் பேரின்பநிலைய
மாய், என்றும் நிலைபேறுள்ள அழியா முழுமுதற் பொரு
ளாய் விளங்காநின்ற ஒப்புயர்வில்லா ஒரு தனித் தலைமைப்
பெருங்கடவுளையே அறியும் பேரறிவுகொண்டு அப்பேரறி
வோடு ஒருங்கு நிகழும் பேரின்ப அமிர்தக்கடலில் இனித்
துப் பேரின்ப வுருவாய் நிலைதிரியாது அமர்ந்திருப்பர். இங்
ஙனம், முனிவரால் அடையப்பெற்ற ஆநந்தமானது எல்லை
யற்ற பேராநந்தக் கடலாய், எல்லா ஆன்மாக்களும் முடி
வில் அடைதற்குரிய முடிந்த பதமாய் விளங்கும்.

இனி உலகத்திலுள்ள எல்லாவுயிர்களும் ஆனந்தப் பேற்றினையே முடிந்த பதமாக அவாவுதல் உணர்ந்து, உலகத்திலுள்ள சிறந்த சமயங்கள் எல்லாம் நிலையில்லாத வினைச்சிற்றின்பங்களைப் பெறுவதிற் கருத்தூன்றல் ஒழிந்து, நிலையான கடவுளின் பேரின்பத்தைப் பெறுகவென வலியுறுத்தலாயின. இங்ஙனமே சைவசமயமும் கூறுவது திருவாசகம் முதலிய தமிழ் மறைகளால் வெள்ளிடை மலைபோல் விளங்கக்கிடக்கின்றது.

எல்லா உயிர்களும் ஆனந்தப் பேற்றினையே முடிந்த பதமாக வைத்து விரும்புதலாலும், ஆனந்தவுருவாய் விளங்குதலே கடவுளின் சொரூபமாகிய உண்மை நிலையாக இருத்தலாலும் அக்கடவுளைக் குறித்துப் பேசுங்காலத்தும் அவரை அழைக்குங் காலத்தும் ஆனந்தம் என்னும் பொருளைத்தரும் பெயர்களிட்டு வழங்குதலே எல்லாரும் செயற்பாலதாகிய பெருங்கடமையாகும். அஃதேன், என்றால் ஒரு பொருளைச் சொல்லும்போது அப்பெயரினாற் குறிக்கப்படும் பொருள் நினைவுக்கு வரவே அந்நினைவின் வயப்பட்ட நம்முயிர் அவ்வண்ணமாகவே நிற்குமாதலான் என்பது. ஆனந்தம், இன்பம், அன்பு, அருள் என்னுஞ் சொற்களை வழங்குங்கால், அச்சொற்களால் சுட்டப்படும் இன்பம் என்பது நம்நினைவில் எழ, நம்முயிர் அவ்வுணர்வின்பாற் பட்டுத் துன்பத்தை விட்டு இன்பவுருவாயே விளங்கும். ஆகவே, கடவுளை இன்பப் பெயரிட்டு அழைத்தலே மாட்சி உடைத்தாம் என்பது இனிது புலப்படும். துன்பத்தைப் போக்கி இன்பத்தைத்தரும் இன்ப உருவினர் என்று அவரை வழங்குதலே நாம் கடைத்தேறுதற்கு உபாயமாதலால் அப்பெயரிட்டு அழைத்தலே நமக்கு இன்றியமையாத கடமையாகும். இவ்வரியபெரிய உண்மையை எம்போன்றார்க்கு அறிவுறுத்தற் பொருட்டாகவே, மணிவாசகப் பெருமான், "ஈறிலாப் பதங்கள் யாவையுங் கடந்த இன்பமே! என்னுடைய அன்பே!" என்று அருளிச்செய்ததும், இம்முடிபு முழுதும் ஒருங்கு அநுபவித்துணர்ந்த திருமூலயோகியும் "அன்பே சிவம்", என்று அருளிச்செய்ததும் அறிக.

ஆத்திக மதக்கொள்கைகள் ஒன்றுக்கும் இணங்காது கடவுள் இல்லை என்று கூறும் சமயிகளுங்கூட, "எல்லையற்ற

ன்பினை உருவே கடவுள்" என்று மொழிந்தால் அதனை
டனே தழுவிக்கொள்வர். அஃதெதனாலெனின், கடவுளின்
ற்ற குணங்களெல்லாம் மக்கள் அறிவுக்கும் அனுபவத்திற்
ஞ் சிறிதும் எட்டாதனவாகலின், அவ்வறிவுக்கும் அனு
பத்திற்கும் வாராதனவெல்லாம் பொய் யென்றுரைக்கும்
ச்சமயிகளிடத்து அவற்றைச் சொல்லிக் கடவுள் ஒருவர்
ண்டென்று நாட்டுதல் ஒருவாற்றானும் ஏலாததொன்றாம்;
ங்ஙனம் கூறுதலை விடுத்து நமதறிவுக்குப் புலனாயும் நம
னுபவத்திற்குப் பொருளாயும் விளங்கும். அன்பு அல்லது
ாந்தத்தின் எல்லையற்ற வடிவே கடவுள் என்றுரைப்போ
யின் எல்லா உயிர்கட்கும் அனுபவமாயுள்ள அதனை
றுக்க மாட்டாமையின் அவர் அதற்கு உடனே இணங்கு
இங்ஙனம் கடவுள் உண்டென்பார் இல்லையென்பாரான
ந்திறத்தாராலும் மறுக்கலாகாது, தழுவப்படும் முடிந்த
ண்மையா யிது விளங்குதலைத் தெற்றன வுணர்ந்தே மணி
ாசகப் பெருமானும், திருமூலநாயனாரும், இறைவனை
இன்பமே", "அன்பே" என்று இறைஞ்சினார்கள். சைவ
மய ஞான நூல்களில் முதனூலாகிய சிவஞானபோதத்தும்
அருளின்றவனன்றேயில்லை" என்று அருளே கடவுளாதல்
லியுறுத்துச் சொல்லப்பட்டமை காண்க.

"சிவம்," என்னும் சொல்லைத் தமிழ் மொழி என்று
டுப்பினும், வடமொழி என்று எடுப்பினும், அது பேரானந்
ம், சுகம், பாக்கியம், மங்கலம் என்னும் இன்பப் பொருளை
ல்லாமல் வேறு பொருளைத் தரக் காண்கின்றிலேம்.
அது தமிழில், செந்நிறமென்றும், செவ்விது என்றும்
பாருள்படும் சிவ, செம் என்னும் பகுதிகளோடு ஒற்று
மைப்பட்டு அவ்வின்பமென்னும் பொருளைத் தருமாறு தமிழ்
ாற்களால் நன்குணரப்படும்.

இனி, உயிர்களுக்குப் பேரானந்தத்தை ஊட்டும்
அருட்பெருங் கடவுளானவர், அவ்வான்மாக்களைப் பற்றி
வருத்தும் துன்பத்தை முற்றும் ஒழித்தே தனது இன்
அருளை வழங்குவர் ஆகலின், இன்பத்தைத் தருதலோடும்
துன்பத்தைப் போக்குதலும், அம்முழு முதற் கடவுளுக்
குரிய உபகாரச் செய்கையின் இயல்பாம். உயிர்களுக்கு
இன்பத்தைத் தந்தருளுங் கடவுள் அவ்வுயிர்களிடத்துத்

"தொன்று தொட்டே முனைத்து நிற்கும் துன்பத்தை நீக்கி யல்லது அதனைத் தருதல் ஆகாமையின், அங்ஙனந் துன்பத்தைப் போக்கும் அவரது பேருபகாரச் செய்கையை மறவாது நினைந்து, அவரை அப் பெயரால் அழைத்தலும் நம்மனோர்க்கு இன்றியமையாத கடமையாகும். அறியாமையில் அகப்பட்டு வருந்தும் நாம் இன்பத்தைப் பெறுமுன் நம்மை இடையறாது வருத்தி வரும் துன்பத்தைப் போக்கிக் கொள்ளவே விருப்ப முற்றிருத்தலால் நமக்கு அவ்வுதவியைச் செய்யும் நம் ஆண்டவனைத் துக்கத்தைத் துடைப்பவன் என்று அழைத்தலிலேதான் அவா மிகும். தொழு நோய் கொண்டு உடல் அழுகி மிக வருந்தும் ஒருவன் முதலில் அந்நோயைத் தீர்க்கும் மருத்துவனையே நாடி நிற்றல் போலவும், ஆற்றின் பெரு வெள்ளத்தில் அகப்பட்டு நிலை தடுமாறி அலைப் புண்டுபோம் ஒருவன் தன்னை அதினின்று மெடுத்துக் கரையேற்றுவானையே தேடக் கூடத்தல் போலவும், சுற்றி எரியுந் தீ நடுவே நின்று துடிக்கு மொருவன் தன்னை அத் தீயினின்று மீட்பான் உதவியையே விரும்பி அலறுதல் போலவும், "ஆணவமலம்," என்னும் பெரிய பாம்பின் வாயிலகப் பட்டு வருந்தும் மக்களான நாம் நம்மை அதினின்றும் விடுவிக்கும் முதல்வன் உபகாரத்தையே அவாவி நிற்கின்றோம். ஆதலால், அப்பரம் பொருளைத் துன்பந் துடைப்பவன் என்று அழைக்கவே, நாம் அத்துன்பத்தினின்றும் விடுவிக்கப்படுதற்கும், அதனையே விழைந்து நிற்கும் நமது உயிர் சுபாவத்திற்கும் மிக இயைந்ததாகும்.

இனி, இத்துணைச் சிறந்த கடவுளின் உபகாரச் செய்கையை இனிது விளக்கி அதனை நமது நினைவில் எழுவிக்கும் பெயர்கள் வேறு எச் சமயங்களிலாவது கடவுளுக்குப் பெயராக வழங்கப் பட்டிருக்கின்றனவா வென்று நாம் ஆராய்ந்து பார்த்த மட்டில், அவைகளில் அவை இருக்கக் கண்டிலேம். அல்லது அவற்றுள் எதிலேனும் அப் பெயர் இருக்குமாயின் அது நமது சைவமயமே என்று பாராட்டி அக மகிழ்வோம். நமது சைவ சமயத்தின் கடவுட்கு துன்பந் துடைப்பவன் என்று குறிக்கும் பெயர்கள் பலவுள. அவையாவன:— உருத்திரன் என்னுஞ் சொல் துக்கத்தை

ஓட்டுபவன், இருளை அறுப்பவன் என்று பொருள் பெறும்
அரன், வைத்திய நாதன் என்னுஞ் சொற்களும், துக்கத்தை
யழிப்பவன், ஆணவ நோயைப்போக்குபவன் எனப்பொருள்
தந்து சிவபெருமானுக்கே பெயர்களாக வழங்கி வருகின்றன.

இனி, இங்ஙனந் துன்பத்தை நீக்குதலும் இன்பத்தைக்
கொடுத்தலுமாகிய உபகாரச் செய்கைகள் இரண்டும் நம்
ஆண்டவனிடத்து ஒருங்கு அமைந்திருக்கும் பான்மையினை
உணர்த்துதற் பொருட்டாகவே இருக்கு வேதமானது
பத்தாவது மண்டிலத்தில் "உருத்திரன்", "சிவன்" என்னும்
இரண்டு அருமைத் திரு நாமங்களையும் ஒன்று சேர்த்து
ஒரு கடவுட் பெயராகவே கூறுவதாயிற்று.

உருத்திரன், சிவன் என்னும் இவ்வருமைப் பெயர்களைக்
கேட்ட மாத்திரத்திலே, இவ்வுண்மைகளை உணரப் பெறாத
சிலர் இவை, ஒரு சமயத்தின் தெய்வத்தைக் காட்டுதலால்
நாம் கேட்கற்பாலதல்லவென்று விகொர்து கூறுகின்றார்கள்.
என்னை, அவர்கள் கூறுமாறு ஒவ்வொரு சமயத்திற்கும்
ஒவ்வொரு தெய்வமா இருக்கும்? உள்ளவர் ஒரு கடவுள்
அன்றோ! "ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்," என்று
நமது திருமூல யோகிகளும், "ஒன்றென் றிரு தெய்வமுண்
டென்றிரு," என்று நமது பட்டினத் தடிகளும் வற்
புறுத்தி யருளினார்கள்.

எல்லாராலுந் தழுவப் பட்டதனையே யாமுந் தழுவு
வேம், என்று சொல்லுதலினும், மிக்க அறியாமை வேறொன்
றில்லை. அரிய பெரிய உண்மைகள் அறிவின் மிக்க ஒரு
சிலர்க்கே விளங்குமல்லாமல் அவை எல்லார்க்கும் விளங்
குவன வல்ல. அவ்வுண்மைகள் எல்லாம், எல்லார்க்கும்
ஒரு தன்மையாய் விளங்குமாயின், நம் மக்கட் பரப்பின
ருட் காணப்படும் இத்தனை வித்தியாசங்களும், இத்தனை
சமய வேறுபாடுகளும், நடையுடை பாவனை ஒழுக்க வேறு
பாடுகளும் பிறவும் வரக்காரண மில்லையே! ஆகையால்,
நம் அருமைச் சிவநேசச் செல்வர்காள்! சிலரால் தழுவப்
பட்டனவென்று நல்லவற்றைக் கை விடுத்தலும், பலராற்
கொள்ளப் பட்டனவென்று தீயவற்றைக் கைப்பற்றுதலும்
அறிவுடையோர்க்கு ஒரு சிறிதும் ஆகாதனவாம். மற்று

எவரிடத்து எது காணப்படினும், எவர் எது சொல்லினும் அவற்றின் தன்மைகளை ஆராய்ந்து நல்லனவற்றைக் கைக்கொண்டு நலமுறுதலே அறிவுடையோர் செயற்பாலதாம் பெருங்கடமையாகும். இதுபற்றியே, நமது தெய்வப்புலவர்,

"எப்பொருள் யார்யார் வாய்க்கேட்பினும் அப்பொருள்
மெய்ப் பொருள் காண்பதறிவு,"

என்று அருளிச் செய்தனர்.

இனி, வேறொரு சமயம் புதிதாகத் தோன்றினும் அதையும் சைவ சமயம் புறக்கணித்தது இல்லை என்பதற்கு, "விரிவிலா அறிவினார்கள் வேறொரு சமயம் செய்தே எரிவினாற் சொன்னாரேனும் அதுவும் எம்பிரார்க்கு ஏற்றதாமே," "யாதொரு தெய்வங் கொண்டீர் அத் தெய்வமாகி மாதொரு பாகனார்தாம் வருவார், என்றும், "வேறுபடு சமயமெல்லாம் புகுந்து பார்க்கில் விளங்கு நின் திருவிளையாட்டன்றி வேறுண்டோ" என்றும், "அறுவகைச் சமயத்தோர்க்கும் அவ்வவர் பொருளாய்," என்னும், மேற்கோள்கள் இனிது நிறுவும் என்க.

இனி, சைவசமயமானது பிறப்பினாலாவது அல்லது வேறு எக்காரணத்தினாலாவது ஒரு கூட்டத்தார், ஒரு நாட்டார், ஒரு பிறப்பார் என்று கருதுவதற்கு இடந்தராது என்பதற்கு நமது சமய குரவர்களருளிய தமிழ் மறையே சான்றாக விருக்கின்றது. "சாத்திரம் பல பேசும் சழக்கர்காள், கோத்திரமுங் குலமுங் கொண்டென்செய்வீர்", என்பதும், "சாதி, குலம், பிறப்பு என்னும் சுழிபட்டுத் தடுமாறு மாதமிலி நாயேனை," எனவும் இவை போன்ற எண்ணிறந்த மேற்கோள்கள் பரக்கக்காணலாம். நமது திருமூலயோகிகள், "அன்பேசிவம்" என்று கூறியதை யொப்ப, "சிவம்" என்று அழைக்கப்பிரியமில்லையேல், வேறு எப்பெயரிட்டு எவர் எவ்வெவ்வாறு அழைப்பினும் அழைக்க வெறும் பேர் மாத்திரையானே நமக்குள் வேற்றுமைவேண்டாம் என்பவே சைவசமயத்தின் முடிபான கொள்கைகளாம். ஆகவேதான், நமது தாயுமான சுவாமிகளும், "எவ்வுயிர்த்திரளும் உலகில் என்னுயிரெனக்

குழைந்துருகி நன்மையாய் இதழுரைப்ப எனதென்ற யாவையும் எடுத்தெறிந்து," என்றும் அருளினார்கள்.

இவ்வாறு இரக்கமும், அன்பும், அருளும், எல்லையின்றி மிகப்பெற்றோர் களங்கம் அற்ற உயிர்களாய் இக்குணங்களுக்குத் தூய நிலைக்களனான சிவத்தாற் பற்றப் பெற்று அச்சிவத்தில் அழுந்திச் சிவவடிவாய் நிலைமாறாமல் நிற்பரென்பது திண்ணம். ஆகவேதான் நமது பெரியார்களும், "ஆவுரித்துத் தின்றுழலும் புலையரேனுங் கங்கைவார் சடைக்கரந்தார்க் கன்பராயின் அவர் கண்டீர் நாம் வணங்குங் கடவுளாரே" என்றும், "புலையரேயெனினும் ஈசன் பொலன்கழலடிப்புயிற் புந்தி நிலையரேலவர்க்குப் பூசை நிகழ்த்துதல் நெறியே யென்றும்,"....."எள்ளற் பழிகீழ் மக்களேனும் இழிகுலத் தோராகிலும், வள்ளற்பரமன் திருநீறு மணியுமணிந்த மாண்பினரை யுள்ளத்துள்ளே யிருபோது முணர்ந்து தெருண்டு சிவனெனவே கொள்ளத் தகைய அறிவினரே பிறவிக்கடலிற் குளியாதார்," என்றும், "எவரேனும் தாமாக இலாடத்திட்ட திருநீறும் சாதனமுங் கண்டாலுள்கி இவர் தேவர் அவர் தேவரென இரண்டாட்டாதொழிந்து," என்றும் இனிதுகூறி யருளினார்கள்.

இவ்வாறு, இறைவனது உண்மைப் பெரு நிலையை இனிதுணர்ந்து, அவ்வுணர்ச்சி வலியால் இரக்கமும் அன்பும் அருளும் முதிருமாறு இவ்வுலகத்தின்கண் உள்ள எல்லா உயிர்களையும் இறைவற்குருப்படமாய்க் கண்டு பழகவே எல்லாரும் துன்பத்தின் நீங்கிப் பேரின்பத்தினையடைகுவர். இதுதான் உலகில் மானிடராய்ப் பிறந்த ஒவ்வொருவரும் உடன்பட்டுத் தழுவுதற்குரிய "பொதுமக்கள்கண்டு உய்யும் நன்னெறி" என்னும் முடிந்த பேருண்மை சைவ சமயத்திலேயுள்ளது என்பது எவரும் கண்டு தெளிவாராக.

"யாவர்க்குமாம் இறைவர்க்கொரு பச்சிலை
யாவர்க்குமாம் பசுவுக்கொரு வாயுறை
யாவர்க்குமாம் உண்ணும்போது ஒரு கைப்பிடி
யாவர்க்குமாம் பிறர்க்கு இன்னுரைதானே,"

திருச்சிற்றம்பலம்.

“உலகினை யிறந்துநின்ற வரனுருவென்பதோரார்
உலகவனுருவிற்றோன்றி யொடுங்கிடுமென்றுமோரார்
உலகினுக்குயிருமாகி யுலகுமாய்நின்றதோரார்
உலகினுள் ஒருவனென்பருருவினையுணராரெல்லாம்.”

“குறிகளும் அடையாளமுங் கோயிலும்
நெறிகளும் அவன்நின்றதோர் நேர்மையும்
அறிய ஆயிரம் ஆரணம் ஓதிலும்
பொறியிலீர் மனம் என்கொல்புகாததே.”

“சிவனெனும் நாமம் தனக்கேயுரிய செம்மேனியம்மான்” என்று நமது பெரியோர்கள் தமிழ்மறையின்கண் பலவிடங்களிலும் “சிவன்” என்னும் பெயர் நமது இறைவனுக்குச் சாலச்சிறந்ததாகக் கூறியுள்ளார். அதாவது “சிவம்,” என்னுஞ்சொல் “செம்மை,” என்னும் பண்பின் அடியாகப் பிறந்ததாகவும் சிவபெருமானுடைய மேனியைச் செந்நிறமாக உருவகப்படுத்தி பலவிடங்களிலும் செந்நிறம்போன்ற அனற்பிழம்பை யொப்ப மேனியையுடையவர் சிவபெருமான் என்று கூறுவாராயினர். நமது அப்பர் சுவாமிகளும் “அருக்கன்பாதம் வணங்குவாரந்தியில் அருக்கனாவான் அரனுருவல்லனோ” என்று மொழிந்ததற்கிணங்க, உலகிற்கெல்லாம் ஓர் ஒப்பற்ற அனற்பிழம்பாய்த் திகழும் ஞாயிற்று மண்டிலத்தை சிவபெருமானுடைய அருளுரு விளக்கமெனக்கருதி, இவ்வுண்மையை எல்லாவுயிர்களும் தமது கட்புலனெதிரே கண்டு வழிபட்டு உய்வான்வேண்டி

இறைவன் வைத்த பேர் இரக்கத்தாலும் இறைவன் தன்னுடைய உருவை, உருவத்தைப்பெற்ற மக்கள் ஒருவாறு கண்டு உய்யவேண்டுமென்ற கருணையினாலும், அனல் அமைந்த ஓர் ஒப்பற்ற வடிவின்கண் முனைத்து விளங்குவானாயினனென்றும் கண்டுகொள்க. இதனை, "விறகிற்றீயினன், பாலிற்படுநெய்போல் மறையநின்றுளன் மாமணிச்சோதியான்," என்னும் மேற்கோளும் இனிது நிறுவும்.

ஆகவே, மிகப்பண்டைக் காலந்தொட்டு இந்நிலவுலகம் யாங்கணும் உள்ள மக்கள் எல்லாம் இறைவனைத் தீப்பிழம்பினும், ஞாயிற்றினும் கண்டு வழிபட்டார் என்பது எவரும் அறியற்பாற்று. இப்போது, சிறப்பாகக் கொண்டாடப்பெறும் பழைய நாகரீகமடைந்த நாட்டார்களின் பல சரித்திரங்களும் எமக்கு உடனிருந்து இடம் தருகின்றன. எப்படியெனின், பல்லாயிர ஆண்டுகட்கு முன்னரே, நாகரீக வாழ்க்கையில் நனி சிறந்து விளங்கிய எகுபதியர் (Egyptians) ஞாயிற்றினை வழிபட்டுவந்தமை, இஞ்ஞான்று அந்நாட்டில் பழுதுபட்டுக் கிடக்கும், தண் தமிழ் நாட்டு அரிய பெரிய சிவாலயங்களைவிடச் சாலச்சிறந்த கோயில் சுவர்களின் கண் கல்வெட்டுகளால் எல்லாம் வல்ல இறைவனைக் கதிர்க் கடவுளாகவே வழிபட்டு உய்ந்தார் என்றும் இனிது விளங்குகின்றது.

இவர்களைப்போன்றே, நாகரீகத்தில், சிறந்தவர்களாகக் கொண்டாடப்பெற்ற பாபிலோனியரும் தங்களுடைய நாட்டின்கண் பற்பல விடங்களிலும் ஞாயிறுக்கும், திங்களுக்கும் பற்பல கோயில்களை நிறுவி வழிபட்டுவந்தார்கள். ஊர் என்று பெயர்பெற்றவிடத்தில் திங்களுக்காகவென வியற்றிய ஓர் பெரிய கோயில் இன்றும் இருக்கின்றது.

இவர்களைப்போன்றே சாலடியரும் ஞாயிறுக்கும், திங்களுக்கும், தீக்கடவுட்கும் அரிய பெரிய கோயில்கள் அமைப்பித்து வழிபாடு ஆற்றிவந்தனர். எமது மூன்று கண்ணுடைய பிரானின் மூன்று கண்களையே இவர்கள் வழிபாடாற்றி வந்தனர் என்று கூறுவதும் மிகையேயாகும். இவர்களிடத்தில் தண்தமிழ்ச் சொல்லான பகலவனில் உள்ள "பகல்" என்னும் சொல்லும், "ஊர்" என்னும் சொல்லும்,

"அணு" வென்னும்சொல்லும், முருகனில் உள்ள "முருகு",
என்னும் சொல்லும், விரவிநிற்றலால், இந்தச் சாலடியர்
வணங்கும் கடவுளுக்கு முருகனில், உள்ள, 'முரு' என்னுஞ்
சொல்லே வழங்கப்பெறுவதால், இவர்கள் நாடு தன் தமிழ்
நாட்டு மாந்தர் குடியேறிய நாடு என்பது புலப்படும்.

இவர்களைப் போலவே நாகரீகத்தில் முதிர்ந்த பினீசிய
ரும் பகலவனை ஒரு காலத்தில் அமைதியான வடிவத்
தோடும், பின்னொருகால் கொடிய தீக்கடவுள் வடிவத்
தோடும் வைத்து வழிபாடு ஆற்றிவந்தனர். அவர் இறை
வனது அடையாளங்களை நமது சிவலிங்கத்தையொப்ப
நேர் நீண்டு தலைகுவிந்த லிங்கங்களை மலைமுகடுகளின்மேல்
நிறுத்தி அங்கு அவற்றை வணங்கி வந்தனர். தயர் (Tyre)
என்னும் நகரின்கண் இவர்களுடைய மிகப் பழைய கோயி
லின்கண் வெள்ளி மேடையின்மேல் இறைவன் அடையாள
மாக இரவும் பகலும் ஓயாது தீ எரியவிட்டு வழிபாடு
ஆற்றிவந்தனர். இவர்கள் தங்கள் கடவுளுக்குச் செந்
தமிழ்ப் பழஞ்சொல்லாகிய 'எல், எலியன்' என்னும் பெயரை
வைத்து வழங்கி வந்தார்கள். இதன் பொருள் தொல்
காப்பியத்தில். 'எல்லே இலக்கம்', என்று உரைக்கப்
பட்டமையாற் கண்டுகொள்க. இவ்விடத்தில் 'எல்' என்
னும் மொழியும் ஒளியினை உணர்த்துமாறு உணர்க.

அராபியரும் தங்கள் கடவுளை அல்லா என்று கூறிய
தும் இந்த 'எல்' என்னும் சொல்லின் திரிபேயாம்
என்று அறிஞர் கூறுவர். இந்த அராபியரும் பினீசியர்
வதிந்த நாட்டையடுத்துள்ள தேயத்தில் உறைந்தவராய்
அவர் தம் நாகரிகங்களை ஏற்று உயிர்வாழ்ந்தவர்களாதலால்
அவர்களோடு ஒப்ப இவர்களும் தமது இறைவற்கு அப்
பெயரே இட்டு வழங்கி வந்தார்களென்று சரித்திர
ஆராய்ச்சி வல்லுநர்கள் கூறுகிறார்கள். இவர்களுக்குக்
கழிபெருஞ் சிறப்புடைய திருக்கோயில் அமைந்த மெக்கா
நகரத்தில் தமக்கு முன்னிருந்தோரால் வழிபாடு செய்யப்
பெற்ற அந்நகரின் நடுவணுள்ள திருக்கோயிலிற் பண்டு
தொட்டு முழுமுதற்கடவுள் அடையாளமாக நிறுத்தப்
பட்டிருந்த சிவலிங்க வடிவத்தைமட்டும் மகமது முனி

வரும் தகர்க்கவேண்டாமென்று தடுத்து அந்தன்கண் அன்போடும் வழிபாடு ஆற்றிவரலாயினர். ஆகவே, ஒரு தனி முழுமுதற்கடவுளுக்கு அடையாளமாக நிறுத்திய குவிந்த லிங்கத்தை வணங்கல் ஒருவாற்றானுங் குற்றமாகா மற் பெரிதும் பொருத் தமுடைத்தேயா மென்பது அம்மகமது முனிவர்க்குக் கருத்தாதல் பெறும். அதனாலன்றே இன்றுகாறும் அம்மெக்கா நகரத்துத் திருக்கோயிலின் கண் சிவலிங்கவடிவமே போல்வதொரு திருவுருவம் வைத்துப் பெரிதும்போற்றி வழிபடப்பட்டு வருகின்றது. ஆகவே, அராபியரும் பண்டைக்காலந் தொட்டே சிவலிங்க வடிவத்தினையே வணங்கி வருமாறு நன்கு புலப்படும்.

இவர்களுக்குப் பிற்பட்டு நாகரிகத்தில் முதிர்ந்த கிரேக்கர்களும் பகலவனையே வழிபட்டு வந்தனர். இவர்கள் பகலவனுள் விளங்குங் கடவுளை சியஸ் (Zeus) என்னும் பெயரிட்டு அழைத்தனர். இவர்கள் சியஸ் என்னுங் கடவுளை ஒலிம்பஸ் (Olympus) என்னும் மலைமுகட்டின் மேல்வைத்து வணங்கிவந்தமை சிவபெருமானைப்போலவே அக்கடவுளுஞ் சடைமுடியுடையராயும் முத்தலைவேல் ஏந்திய கையினராயும் சொல்லப்படுதலும் எமது இறைவனது பெயராகிய சிவம் என்னுஞ் சொல்லையே இவர்கள் சியஸ் என்று கூறினதாகப் புலப்படுகின்றது.

இவர்கள் இறைவனை வழிபடும்போதெல்லாம் வேள்வித்தெற்றிமேல் தீவளர்த்து அதன் வாயிலாக இறைவற்குத் தங்கள் வந்தனத்தை ஆற்றிவந்தமையும் அறியற்பாற்று. அவர்கள் இறைவற்கு அமைத்துவைத்த கோயில்கள் இற்றைக்கும் எமது தென் தமிழ்நாட்டுக் கோயில்களையொப்பவே, வரிசை, வரிசையாக கற்றூண்கள் நிறுத்திக் கட்டப்பட்டு இருக்கின்றன. அவர்கள் தம் கோயிலுள்ளே று, குளங்களும், கோயிலின் வெளியே ஒரு வேள்வி மேடையும், உள்ளேயுள்ள திருவுருவங்களின் எதிரே ஒரு வேள்வித்தெற்றியும் ஆக, தமிழ்நாட்டுத் திருக்கோயில்களில் உள்ளவாறே அமைத்திருந்தனர். இவ்வுண்மையைத் தெலுப்பி (Delphi) என்னும் நகரத்தின்கண் அப்பலோ

(Appollo) என்னும் மாப்பெருங்கோயிலில் மூலத்தானத்திலே கருவறையிலே நிறுத்தப்பட்ட அக்கடவுளின் திருவுருவ அமைப்பும், அதற்குமுன்னர் வேள்வித்தெற்றிமேல் ஓயாது தீயெரிந்துகொண்டிருக்கக் கடவுளை வழிபட்டுவந்த ஒழுகலாறும் தண் தமிழ்நாட்டாரை யொப்பச் சிவபெருமானை வழிபட்டுவரும்ஒற்றுமை தெற்றென விளங்காநிற்கும்.

இனி கிரேக்கர்க்கு அடுத்த நிலையில் அவரைப் பின்பற்றி அவரைப்போல் நாகரிக வாழ்க்கையில் மிக்குவிளங்கிய உரோமர் தொழுது போந்த கடவுளுக்குப் பெயர் "ஜூபிதர்" என்பதாம். இதற்குப் பொருள், "ஒளிவடிவினனான தந்தை" என்பதாம். உரோமர், கபிதோலின் (Capitoline Hill) மலைமுகட்டின்மேல் எழில்பெற அமைத்த திருக்கோயிலில் வைத்து வணங்கிய கடவுளின் திருவுருவம் ஒளிவடிவினதாய் கையில் அனலேந்தி அடியார்க்கு இன்னருள் சுரக்கும் நமது சிவபெருமானோடு ஒப்ப இருப்பது நனைவினதாகும். இருக்குவேதத்திலும், இறைவனது இலக்கணத்தைக் கூறுங்கால் இவ்வாறே முதல் மண்டலத்தின் நாற்பத்து மூன்று, நூற்றுப்பதினைன்காம் பதிகங்களிலும், இன்னும் இரண்டாம் பதிகம், முப்பத்துமூன்றும் பதிகத்திலும், ஏழாம் மண்டிலம், நாற்பத்தாறும் பதிகத்திலும் உருத்திரனுடைய இலக்கணம் இத்தன்மைத்து என்று ஓதப்பட்டமை காண்க. ஒளிக்கடவுளாகிய சூரியர்க்கு வெண்மை நிறம் வாய்ந்த உயிர்கள் விருப்பமாயினாற்போல, சிவபெருமானுக்கும் வெண்ணிறமுடைய எருது உரித்தாதல் காண்க. உரோமருந் தங்கோயில்களில் வேள்வித் தெற்றிகள் அமைத்து அவற்றின்கண் எரிவளர்த்து அதன் வாயிலாகத் தங்கடவுளர்க்கு வேள்வி வளர்த்து வழிபாடு ஆற்றி வந்தனர். இதனால் உரோமருக்கும் தமிழ்நாட்டுமாந்தருக்கும் உள்ள ஒப்புமை கண்டுகொள்க.

இஞ்ஞான்று, இந்நிலவுலக மியாங்கணும் அறிவிலும் நாகரிக வாழ்விலும் தலை சிறந்து விளங்கும் ஆங்கிலர், ஜர்மானியர். என்னும் இருதிறத்தாருக்கும் முன்னோரான டியுதோனியர் (Teutons) என்பார் ஓடன் (Woden) தோர் (Thor) என்னுங் கடவுளரை வழிபட்டு வந்தார்கள்.

‘உடன்’ என்பதற் குப்பொருள் எல்லாம் வல்லவர், எங்கும் நிறைந்தவர் என்பதாம். இக்கடவுள் எல்லாத் தேவர்க்குந் தாயான ஒருபெண் தெய்வத்தைத் தமது பக்கத்தே வைத் திருப்பவரென்றும், ஒருவேலேந்திய கையினரென்றும் ஞாயிற்றினைக் கண்ணாக உடையவரென்றும் அவரை வணங் கும் மக்களுக்கு எப்போதும் நன்மையே வழங்குபவரென் றும் கொள்ளப்படுவர். தோர் என்னுங் கடவுள் இடி, மழை, மின்னல் முதலியவற்றை ஆள்வதென்றும், சினம் மிக்க தாய்த் தீயோரை ஒறுப்பதாய்த் திகழ்வதென்று பேணப் படுகின்றது. இங்ஙனம் இரு வேறு வகைப்படுத்து ஓதப் பட்ட இருதெய்வங்களும் உண்மையான் நோக்கும்வழி இரண்டாகாமல் ஒரே முதற்கடவுளின் அறக்கோலத்தினை யும் மறக்கோலத்தினையும் விளங்கக்காட்டி ஒன்றே யாமென்பது இனிது உணரக்கிடக்கும். இங்ஙனமே சைவர் களும் ஒரு முழுமுதற்கடவுளை மங்கலமான அநுக்கிரக ருபத்திற் சிவன் எனவும், பயங்கரமான நிக்கிரகருபத்தில் உருத்திரன் எனவும், இருவேறுவகைப்படுத்து உரைக்கப் படுதல் தமிழ்மறைகளிலெல்லாம் காணப்படும். அப்படி கடவுளை வழிபடுங்கால் அவர்கள் திறந்த வெளியில் முதல் வன் அறிகுறியாக சிவலிங்கத்தை யொப்ப ஒரு பெரிய மரத்தூணை நிறுத்தி அதன் முன்னர் வேள்வித்தெற்றி அமைத்து, தீவளர்த்து வழிபாடு ஆற்றி வந்தனர் என்பதூஉம் அவர்தம் பழைய வரலாறுகளால் (Frankishannals) விளங்கா நிற்கின்றது. நம்மனோரும் இங்ஙனமே அம்பலங் களில் இறைவனை வழிபட்டார்கள் யென்பதற்கு, திரு மறைக்காடு, திருவாலங்காடு, தில்லைவனம், கடம்பவனம், திருவானைக்கா, தில்லையம்பலம், வெள்ளியம்பலம், என் னும் பெயர்களே உறுசான்றாம் என்க. தூண்வடிவு, தறிவ டிவு, கற்குழவிவடிவு, குவிந்தபுற்றின் வடிவு இவைகளைக் காணும்போதெல்லாம் எம் பெரியோர்கள், இறைவன் அவ்விடத்தில் சிவலிங்கவடிவமாக எழுந்தருளியருளுகின் றார் என்று கருதி வழிபட்டு உய்ந்தார்கள்.

இனி, உலகெங்கணும் இதுபோது பரவி தனக்கு ஒப்பு இல்லையென்று கூறுகிற்கும் கிறித்தவ சமயத்தின் மறை யாகிய பைபிளில் எல்லாம் வல்ல முழுமுதற்கடவுட்கு

‘எலோகிம்’ எனும் பெயரே, தனி சிறந்ததாய், சாலப்
பழையதாய் எடுத்தாளப்பட்டிருக்கின்றது. இப்பெயர்
‘எல்’ என்னுஞ் சொல்லிலிருந்து வந்தது என அச்சமய
ஆராய்ச்சிவல்ல புலவர் உரை கூறுகின்றார். அல்லதூஉம்,
மோசே என்னும் அடியவர்க்கெதிரே கடவுள் தோன்றி
‘யான் ஆபிரகாமுக்கும் ஈசாக்குக்கும் யாகோப்புக்கும்
எதிரே காட்சிதந்தபோது, ‘எல் சடை’ என்னும் பெய
ராற்றோன்றினேன்’ என்று அருள் செய்ததில் ‘எல்’
என்னும் பெயரே நன்குகாணக் கிடைக்கின்றது. மேலெடுத்
துக்காட்டிய பினீசியர், சாலடியர், பாபிலோனியர் கொள்
கை வரலாறுகளில் முதற்பெருங்கடவுள் எல், எலியன்
என்று வழங்கப்பட்ட பான்மையினை விளக்கியிருக்கின்
றோம். ஆகவே, இவர்களும், கடவுளை ஒளிவடிவினனா
என்றே வழங்கப்பட்டமை புலனாகா நிற்கும். இதற்குச்
சான்றா, ஆபிரகாம் என்னும் அடியவர் மகப்பேறுவேண்டி
இறைவனைத்தொழுது அறிதுயிலில் அமர்ந்திருந்தபோது
அவர்க்குமுன்னே ஆண்டவன் தழல்வடிவாகத்தோன்றி
னன் என்பதூஉம், மற்றொருகாற் சினை (Sinai) என்னும்
மலைமுடிமேல் இறைவனது அருள்முழக்கானது ஆறுநாள்
வரையில் கவிந்திருந்து ஏழாம்நாளில் தோன்றியபோது
இறைவனது அவ்வருட்டோற்றக்காட்சி அம்மலைக் குவட்
டின்மேல் விளங்கும் அனல்வடிவாய் இசரேயல் மக்களின்
கண்களுக்குப் புலப்படலாயிற்று என்பதூஉம், பைபிளின்
கண்ணே விளக்கமுறச் சொல்லப்பட்டிருத்தலின் இஞ்ஞான்
றைக் கிறித்தவ சமயத்தவரின் முன்னோர் முழுமுதற்கடவு
ளின் திருவுருவை அனல்வடிவாகவே கண்டு தொழுதன
ரென்னும் உண்மை மறுக்கப்படாது நிறுவுமென்க. இவ்வர
லாறுகளில், முதற்பெருங்கடவுட்குச் சிறப்புடைப்பெயரா
கச்சொல்லப்பட்ட ‘எல்சடை’ என்னும் பெயரிற்கண்ட
‘சடை’ என்னுஞ் சொல்லுஞ் சிவபெருமாற்குச் சிறந்த
பெயராகத் தமிழ்நாட்டில் வழங்குஞ் ‘சடையன்’ என்
னுஞ் சொல்லும் ஒன்றாயிருத்தல் பெரிதும் நினைவுகூரற்பால
தாகும். மேலும், யாக்கோப்பு என்னும் அடியவர் இறைவ
னை நேரேவரப்பெற்று, அவனைத் தொழுகுறியாக ஒரு
குவித்த கல்லினை நிறுத்தி அதன்மேல் எண்ணெயைச்

சொரிந்து அதனைப் பீத்தெல் (Bethal) அல்லது முதல்வன் இருக்கும் இடம் (கோயில்) என்று பெயரிட்டு வழிபாடாற்றிவந்தமையும், ஆன் (On or Helipolis) என்னும் ஊரிலிருந்த பகலவன் கோயிலின்கண் ஆன் கன்றினை (நந்தியை) இசரவேல் மரபினர் வணங்கிவந்தமையும், பலிபீடங்களின்மேல் குன்றுத்தீவேட்டு வழிபட்டு வந்தமையும் இசரவேல்மரபினரின் குருமார்கள் ஒளியின் அடையாளமான குவிந்தமணிக்கற்களை மார்பிற் கட்டிக்கொண்டிருந்தமையும் (சிவலிங்க தாரணம்) ஆராய்ந்து பார்க்கும் நடுநிலையாளரெல்லாம் கிறித்துவ சமயத்தினர் தம் முன்னோர் செய்துபோந்த முதற் கடவுள் வழிபாடும் தமிழ் மக்கள் செய்துபோதரும் சிவலிங்க வழிபாடும் ஒன்றேயாமென்று உணராமற்போவரோ!

இனி, நாம் உறையும் ஆசியாக்கண்டத்திலும் நமது கண்டத்திற்கு அப்பாலுள்ள ஐரோப்பாக்கண்டத்திலும் உள்ள நாகரிக மக்கட்கும் பன்னெடுங்காலமாய்த் தெரியாதிருந்து ஏறக்குறைய நானூற்று எழுபது ஆண்டுகளுக்கு முன் கொலம்பசு (Columbus) என்பவராற் கண்டறியப் பெற்ற அமெரிக்காக் கண்டத்தில் மெக்சிகோ (Mexico) என்னும் நகரத்திலும், பெரு (Peru) என்னும் நகரத்திலும் பல்லாயிர ஆண்டுகட்கு முன்னரே, நாகரிகவாழ்க்கையிற் சிறந்து விளங்கிய அந்நாட்டு மக்கள் பகலவனையும், திங்களையும், தீக்கடவுளையும் வைத்து வழிபாடு ஆற்றிய மிகப்பெரிய அழகான பழங்கோயில்கள் இன்றுநாளும் அந்நகரங்களில் பழுதுபட்ட நிலைமையில் காணக்கிடக்கின்றன. ஆசியா, ஐரோப்பாக் கண்டங்களில் உயிர் வாழ்ந்த பண்டைக்கால நாகரிக மாந்தர்களோடு தொடர்பில்லாமல் அமெரிக்காக் கண்டத்திற் றனியிருந்து வாழ்க்கை செலுத்திய அப்பழைய மாந்தர்களின் வரலாறுகள் அவற்றைக் கற்பார்க்குப் பேர் ஆச்சரியத்தை விளைவிக்காமற்போகா. அங்ஙனம் எவரும் வியக்கத்தக்கவராய்த் தனியிருந்த அவர்கள் முழுமுதற் கடவுளைப் பகலவன், திங்கள், தீ என்னும் ஒளியுடைப் பொருள்களில் நேர்முகமாய்க்கண்டு வழிபட்டு வந்தமையை அறிவொருங்கி உணருங்கால் இறைவனை ஒளிவடிவிற்கண்டு தொழும் வழிபாடே உண்மை வழிபாடு என்று கடை

பிடித்து ஐயுறவின்றி நிகழ்த்தி வந்தார்கள். பல்லாயிரம் ஆண்டுகட்கு முன்னர் அவர்கள் எழில்பெற அமைத்த அத் திருக்கோயில்களில் கல்லினாற் சமைத்த பல அரிய திருவுருவங்களும், வேள்வித்தெற்றிகளும் காணப்படுகின்றன இவ்வுருவங்களும், கோயில்களின் அமைப்பும் தென்றமிழ் நாட்டிலுள்ள எமது சிவபெருமானுடைய திருவுருவங்களைப் போன்றதும் திருக்கோயில்களின் அமைப்பைப் பெரிதும் ஒத்திருத்தலும் பெரிதும் வியக்கற்பாலதாம்.

இங்ஙனம், இதுகாறும் எடுத்துக்காட்டிய பண்டைநாள் நாகரீகமாந்தர் வரலாறுகளால், அறிவொளி வடிவான முழுமுதற் கடவுளை நேரே கண்டு வழிபடுவதற்குச் சிறந்த வாயில்களாய் நிற்பன ஞாயிறு, திங்கள், தீ என்னும் ஒளியுடைப் பொருள்கள் மூன்றுமேயாம். அவ்வொளியுடைப் பொருள்கள் மூன்றுங் கட்புலனுறக் காணும் அவ்வளவுக்கே இடந் தருவதல்லது, அன்பின் மேலீட்டால் அடியார்கள் தங்கள் அன்பைச் செலுத்துதற்குரிய இறைவனைத் தொடுவதற்குந், தழுவுதற்கும், பூச்சாந்தம், ஆடையணிகலன் முதலியவற்றால் ஒப்பித்துக் கண்டு களிப்புறுதற்கும் இடந் தாராமையால் அங்ஙனமெல்லாம் செய்து இன்புறுதற்கு மற்ற கல், பளிங்கு, செம்பு முதலியவற்றால் அவ்வொளிவடிவின் அடையாளமாகச் செய்து திரண்டு நீண்டு சலை குவிந்த திருவுருவங்களை வைத்து வழிபாடாற்றுதல் சாலச் சிறந்த முறையாமென நம் முன்னோர் அங்ஙனம் கடைப்பிடித்து ஒழுகலாயினார். இவ்வுருவம் கட்புலனாய் எரியும் தீயின் வடிவோடொப்பச் செய்து நாட்டப் படுதலில் அக்கல் வடிவு ஒளிவடிவின் குறியேயாதல் தேற்றமாம். ஒரு குழியிலிருந்து எரியுந் தீப் பிழம்பு சுற்றிலுந் திரண்டு நீண்டு குவிந்து நிற்றல் எவரும் அறிந்ததேயாம். அங்ஙனமே திரண்டு நீண்டு உருண்டு இருக்கும் சிவலிங்க வடிவும் அதனோடு ஒப்புமைப் பட்டிருத்தல் காண்க. இலிங்காகாரமாயிருக்கும் வடிவம் தீப்பிழம்பிற்கும் அதனடியில் பொருத்தப் பட்டிருக்கும் வட்டவடிவான பீடம் அத் தீப்பிழம்பு எரிந்து நிற்கும் குண்டத்திற்கும் அடையாளங்களாம். ஆகவே, அனற் பிழம்பை ஒத்த வடிவானதாக உள்ள சில சுயம்பு லிங்கங்கள் கங்கை,

பொருளை, யமுனை முதலான யாற்றின் அடிப்படைகளிலும் மலைகளிலும் மலை முழைஞ்சுகளிலும் இயற்கையாகவே கண்டெடுக்கப்பட்டு அவைகளையும், சில விடங்களில் குவிந்து நீண்ட புற்று வடிவுகளையும், இறைவன் அருட் குறியாக நிறுத்தி வணங்கி வந்தார்கள். கட்புலனாகா இறைவன் அருள் விளக்கத்தை ஒருவாற்றாயினும் நம்மனோர் உணர்தற்கு வாயிலாய் நங்கட்புலன் எதிரே இயற்கை விளக்க முடைத்தாய்த் தோன்றுவது அனற் பிழம்பு ஒன்றுமே யாதலால் அதனோடு பலவிதத்திலும் ஒப்புமை யுடைத்தாக நிறுத்திய கல்லும் அவ் வடிவேயுடையதாக எடுத்து நிறுத்தப் படுவதாயிற்று. இவ்வொப்புமை காட்டவே, கல்லால்செய்து அமைத்த திருவுருவங்கள் நிறுத்திய திருக்கோயில்கள் எத்துணைச் சிறந்தன வேனும் அவை அருகில் விளக்கொளி யில்லையேல் அத் திருவுருவங்களை வணங்கித் தங்கள் அன்புரிமையைச் செலுத்த அடியார்கள் என்றும் உடன்படார். அத்திருவுருவங்களின் இருபுடையிலும் நிரல் நிரலாகத் திருவிளக்குகள் சுடர்ந்து ஒளிருமாயினன்றே அவை காண்டற்கும் வழிபாடாற்றற்கும் இசைந்தனவாகின்றன. இதுவேயுமன்றித், திருக்கோயில்கள் அமைத்து அவற்றின்கண் கல்லாற் செய்த திருவுருவங்கள் நிறுத்துகின்றுழிப் பண்டைக்காலந் தொட்டு ஆன்றோர் வழக்காய்ச் செய்யப்படுஞ் செயல் முறைகளின் பொருளை உற்று ஆராயின், தீப்பிழம்பு வடிவே இறைவற்கு உண்மை யடையாளமாதல் தெற்றெனப் புலப்படும். கல் முதலான பருப்பொருள் வடிவங்கள் இறைவனது இயற்கை அருள் விளக்க அடையாளங்க ளாகாமையின் அவனது இயற்கை யருள் விளக்கத்திற்கு இடமாக வயங்குந் தீ வடிவினின்றும் அவனருளொளியை இரந்து பெற்று அப்பருப்பொருள் வடிவங்களில் ஏற்றுதற் பொருட்டு அவ்வடிவங்களி னெதிரே வேள்விக்குண்டம் அகழ்ந்து அதன் பக்கத்தே, தீ வளர்க்கின்றனர். தீயின்கண் உள்ள விளக்கம் மிக நுண்ணியது. ஆகலின், அது தன்னியல்போடு பெரிதும் முரணி நிற்கும் பெரிய கல்வடிவிற் பாயாது. ஆகவே ஒருவாற்றால் தீயினியல்போடொத்தும், பிறிதொருவாற்றாற் கல்லினியற் போடு ஒத்தும், இரண்டிற்கும் நடுநிகர்த்ததாயுள்ள ஒரு

பொருள் அவ்விளக்கத்தைத் தீயினின்று பற்றுக் கல்லின் கண் உய்த்தற்கு இன்றியமையாது வேண்டப்படுகின்றது. அப்பெற்றித்தாம் பொருள் யாதோவெனின், அது தண்ணீரேயாம். யாங்ஙனமெனின், நீர் கல்லினும் நெகிழ்ந்ததாய் இருத்தலின், அஃது அத்தன்மையால் ஒரு புடை அனற் பிழம்பை ஒக்கும். இனித் தீயினும் நீர் தடிப்புடையதாயிருத்தலின், அஃது அவ்வாற்றால் ஒரு புடை கல்லை யொப்பதாய் இருத்தல் காண்க. தெளிந்த தண்ணீர் மிகவும் ஆழ்ந்த இடத்தில் இருக்குங்கால் அதன் நிறம் கருங்கல்லை யொப்ப கன்னங்கரேலென்றிருக்கும். தண்ணீரை ஒரு சிறிதே எடுத்து அதனைக் கீழே ஊற்றி அதுபோது அதனை நோக்கினால் அனலின் நிறத்தையொப்ப வெண்மையாயிருக்கும். தண்ணீரைக் காய்ச்சி நீராவியாக்கி ஓர் நீராவியந்திரத்தில் செலுத்துங்கால் அது தீயையொப்பச் சூடும் பற்றும் பல அரிய செயல்களை இயந்திரத்தின் வாயிலாக வேண்டுவன செய்கின்றது. ஓர் பெரிய யாற்றினின்றும் நீர் விழுங்கால் (Water falls) தீயை யொப்ப மின்சார சக்தியையுண்டாக்குவதோடு சருங்கல்லை யெறிந்ததை யொப்ப தனது வழியில் நேருமவற்றை யெல்லாம் தகர்த்து எறியும் ஆற்றலும் உடைத்து. தீயும் கல்லும் சிலசமயங்களில் பெருஞ்சேதம் உண்டாக்குவதுபோல் ஆற்றின் பெருவெள்ளமும் மக்களுக்குப் பெருஞ்சேதம் உண்டாக்குகிறது. கடலிலுள்ள பெரிய அலைகளை நோக்குங்கால் வெண்ணுரையுடன் இருப்பது, தீயை யொப்பவும் சில சமயங்களில் மலையை யொப்பவும் காணப்படுகின்றது. இதனை யொப்ப கல்லிற்கும் தீக்கும் பொதுவாக அமைந்துள்ள பல பொது இயல்புகள் ஆழ்ந்து நோக்குபவர்க்கெல்லாம் காணக்கிடக்கின்றது.

இவ்வியல்பிற்றுதல் பற்றித் தண்ணீரைப் புதிய மட்கலங்களில் நிரப்பி அவற்றை வேள்விக் குண்டத்து எரியும் தீயின் எதிரே வைத்துத் தீயின்கண் இயற்கையாய் விளங்கும் இறைவன் ஒளியை "எளியேங்களுக்குக் கருணைபுரிவதற்காக இந்நீரின்கண் வருக," என்று தக்கார் பலர் ஒருங்குகூடி அதற்கிணங்கிய நூல்களினால் வரையறுத்த சின்னுள்காறும் இடையறாது வேண்டுவர்; அங்ஙனம் வேண்டிய பின்னர் அவர் வேண்டுகோளுக்கு முதல்வன் எளிவந்து

அந்நீரிற் புகுவதாகக் கருதப்படுகின்றது. பின்னர், அம்மட்கலங்களின் தூயநீரை எடுத்து "எளியேங்கள் வேண்டுகோள் வண்ணம் எங்கள் ஐயனே, இத்திருவுருவத்தில் எழுந்தருளி அடியேங்கட்கு என்றும் அணுக்கராய் விளங்கியிருந்து அருள் வழங்கல்வேண்டும்" என்று இறைஞ்சி, அம்மட்கலங்களின் தூயநீரை அத்திருவுருவத்தின்மேல் பெய்வர். இங்ஙனம் முறைப்படி செயற்பாலனவெல்லாம் முற்றும் செய்து முடித்தபின்தான் கல்லாலமைக்கப்பட்ட அத்திருவுருவம் வழிபடுதற்கு ஏற்புடைத்தாகக் கொள்ளப்பட்டு வழிபாடாற்றப்படுகின்றது.

அனற்பிழம்பின்கண் விளங்கும் முதல்வன் ஒளியைத்தான் நாம் இத்திருவுருவங்களில் வழிபாடாற்றுகின்றேமேயன்றி, வேறன்று என்பதை நுண்ணிதாக ஆய்ந்து ஆராய வல்லார்க்கெல்லாம் செவ்வனே விளங்கும்.

இத்துணையுங் கூறியவாற்றால், தீப்பிழம்பின்கண் இறைவன் விளங்குதல் கண்டே தீயும் தீவடிவான ஒளிவடிவாய் உள்ள ஞாயிறு, திங்கள், தீ முதலியனவும் பண்டைக்காலந் தொட்டு நாகரீகம் உற்ற எல்லா நாடுகளிலும், இருந்த பேரறிவு வாய்ந்த எல்லாமக்களாலும் வணங்கப்பட்டு வந்தனவெனவும், இனித்தீயை யணுகி ஒப்பனை செய்து அன்பர்கள் தாம்தாம் வேண்டியாங்கு வழிபட இயலாமையின், அங்ஙனம் வழிபடுதற்குப் பேரன்புடையராயினோர் தீப்பிழம்போடொத்துத் திரண்டு நீண்டு குவிந்த கல் வடிவினையும் தீ எரியுங் குழியை நிகர்த்த வட்டக்கல்லினையும் அமைத்து அவ்விரண்டையும் ஒன்றாகப் பொருத்திக் "கடவுளின் அடையாளம்" என்னும் பொருளைத் தரும் "சிவலிங்கம்" என்னும் பெயரையும் வைத்து அதனை வழிபட்டு வரலாயினர், எனவும் அறிந்து கொள்ளல் வேண்டும். இன்னும் கல் முதலானவற்றில் அமைக்கப்பட்ட சிவலிங்கத் திருவுருவத்திற்கு மூலம் வெள்ளிக் குண்டத்திற் கிளர்ந்தெரியும் தீப்பிழம்பும், அத்தீம்பிழம்பாகிய திருவுருவத்திற்கு மூலம் விந்து நாதவுருவங்களும் ஆமென்றும், அறிதல் வேண்டும். இவ்விந்து நாதங்கள் ஒலிவடிவில் ஓ என்னும் ஓசையாகவும் வரிவடிவில் ஓ என்னும் எழுத்தாகவும் பிள்ளையார் சுழியாக

வும் சிறக்கும். இனி எல்லாம் வல்ல முதல்வன் விக்கிரகங்களில் நேரே இயைந்து விளங்குதலேயன்றி, நம்மனோர் பொருட்டு அவற்றின் வாயிலாக இவ்வுலகத்திற் காணப்படும் ஞாயிறு, திங்கள், தீ என்னும் ஒளியுடைப் பொருள்களினும், திருவடிவோடொப்பச் செய்து காட்டப்படும் சிவலிங்கம் முதலான திருவுருவங்களினும் விளங்கித் தோன்றி நின்று நம்மனோர் செய்யும் வழிபாடுகளை ஏற்று அருள் புரிவன் என்க.

இனி, சிவலிங்கத்திலுள்ள சிவபெருமானைச் சிவனெனவே தேறி அடியார் வழிபாடாற்றுகின்றபோதும், இம்முறையே அவ்விடம் விளங்கக் கிடக்கக் காண்கின்றோம்.

எப்படியெனின், ஞாயிறு, திங்கள், தீ இவைகளுக்கொப்ப பல பல திருவிளக்குகள் ஒருங்கே அமையப் பெற்ற தீச்சுடர்களினால் இறைவற்கு முன் நின்று தக்காரால் வத்தி வணங்கியும், பின்னர் 'பூரணகும்பம்', என்னும் தீபச்சுடரால் வழிபாடு ஆற்றியும், முடிவாகச் செந்நிறச்சுடர் அமைந்த கற்பூரச்சுடரால் வழிபாடு ஆற்றியும், தூயநீரால், இறைவனாரை ஆட்டுப்பெற்று, அதனை அடியார் வழிபாட்டு உய்வான் வேண்டி வரும் மக்களுக்குத் தூய கற்பூரத் தீபச் சுடர் தன்மை தம் தம் கண்களில் பெய்யப்படுமாம், பிறகு இறைவனருளைப்பெற தூயநீரைப் பருகியும் வழிபடும் முறை இன்றும் திருக்கோயில்களில் நடைபெறுகின்ற உண்மை எவரும் நன்கு ஆராய்ந்து கண்டு தெளிவாராக. இவ்வுண்மை,

“ திருக்கோயில் உள்ளிருக்கும் திருமேனிதன்னைச்
சிவனெனவே தேறினார்க்குச்சிவன் உறைவன் ஆங்கே,”

என்று நமது பெரியோர் கண்டு நன்கு அறிவுறுத்தினார்கள்

இதனையொப்பவே, அம்மை அப்பர் திருக்கோலமும் சிதாகாசத்தில் ஆனந்தத்தாண்டவம்புரியும் நடேசப் பெருமானுடைய திருக்கோலமும், அவர்தம் திருக்கைகளில் ஏற்ற பொருள்களின் தத்துவமும், அவர் ஊர்ந்து செல்லும் இடப வாகனம், தலைமுடியில் தரித்த கங்கை, நறுவெண்தலை ஆகிய இவைகளின் பொருளும், அவரது இடப வாகனத்தில் அமர்ந்த

அம்மையின் தோற்றமும், காளகண்டமும், இடு காடே தனது திருக்கோயிலாக அமர்ந்த நேர்மையும் ஆகிய இவை களின் தன்மை பின்னர்ச் சமயம் நேர்ந்துழி விளக்குவாம்.

“ஈசனுக்கன் பில்லார் அடியவர்க்கன்பில்லார்
எவ்வுயிர்க்கும் அன்பில்லார் தமக்கும் அன்பில்லார்”

மைப்படிந்த கண்ணாளுந் தானுங்கச்சி
மயானத்தான்வார் சடையானென்னினல்
னொப்புடையனல்ல னொருவனல்ல [லா
னோரூரனல்லனோருவ னில்லி
யப்படியு மந்நிறமு மவ்வண்ணமு
மவனருளே கண்ணாகக் காணினல்லா
லிப்படி யனிந்நிறத்த னிவ்வண்ணத்த
னிவனிறைவனென்றெழுதிக் காட்டொ
[ணாதே

திருச்சிற்றம்பலம்.



அடியிற்கண்ட நூல்கள் கீழே கண்டவரிடம் கிடைக்கப்பெறும் :—

| | | |
|---|---|---|
| 1. | மனோன்மணீயம். (Prof. சுந்தரம்பிள்ளை M. A., | 2-12—0 |
| 2. | தமிழ்எழுத்தும், அதன் மறைப்பொருளும் படங்களுடன் (திரு. பா. வே. மாணிக்க (நாயக்கர் B. E., M. C. I., M. I. E.) | 1-10—0 |
| 3. | தமிழ் வரலாறு முதற்பகுதி (ராவ்பகதூர் K. S. சீனிவாச பிள்ளை.) | 0—8—0 |
| 4. | ஷை இரண்டாம் பகுதி ஷை ஷை | 1—8—0 |
| 5. | கரிகாற்சோழன், (பண்டிதர் L. உலகநாத பிள்ளை | 0-12—0 |
| 6. | கார்நாற்பது. | 1—4—0 |
| 7. | திலகவதியார். (பண்டிதர் மு. நடேச முதலியார் | 0—4—0 |
| 8. | சைவமும், சிவலிங்கவழிபாடும் | |

## கரந்தைத் தமிழ்ச் சங்கத்தாரால் வெளியிட்ட நூல்கள்.

| | | |
|---|---|---|
| 9. | கபிலர். (பண்டிதர் ந. மு. வேங்கடசாமி நாட்டார் | ரூ. 1—4—0 |
| 10. | நக்கீரர். ஷை ஷை | 0—8—0 |
| 11. | வேளிர் வரலாற்றின் ஆராய்ச்சி ஷை | 0—3—0 |
| 12. | உபந்நியாசங்கள் (பல புலவர் செய்தவை) | 0—4—0 |
| 13. | ஆசாறுற்றுப்படை. (பண்டிதர் R. வேங்கடாசலம் பிள்ளை | 0—4—0 |
| 14. | பிரசங்கங்கள். V. வேங்கடராம பிள்ளை | 0—2—0 |
| 15. | கல்விப்பயிற்சிக்குரியது தாய்மொழி. வே. ராதாகிருஷ்ண பிள்ளை B. A., | 0—0—6 |

## திருநெல்வேலி சைவசித்தாந்த நூல் பதிப்புக் கழகத்தாரால் வெளியிட்ட நூல்கள்.

| எண் | நூல் | விலை |
|---|---|---|
| 16. | சிவஞானமுனிவரால் இயற்றப்பெற்ற நூல்கள். 1-ம் பகுதி. | 1—8—0 |
| 17. | சோமேசர் முதுமொழி வெண்பா (காலிகோ) | 1-12—0 |
| 18. | ஷை ஷை சாதா காகிதம் | 1—8—0 |
| 19. | திருக்கருவைப் பதிற்றுப்பத்தந்தாதி | 1—4—0 |
| 20. | ஷை ஷை சாதா காகிதம் | 1—0—0 |
| 21. | திருவடிப்புகழ் மாலை | 0—4—0 |
| 22. | ஷை ஷை சாதா காகிதம் | 0—4—0 |
| 23. | சித்தாந்தப்பிரகாசிகை | 0—3—0 |
| 24. | பூப்பிள்ளை அட்டவணை | 0—2—0 |
| 25. | சங்கோத்தரவிருத்தி. | 0—3—0 |

இவையும் பிறவுமாய தமிழ், சமயநூல்கள் வேண்டியவர்கள் கீழே குறிப்பிட்டவரிடத்தில் பெற்றுக் கொள்ளலாம் :—

உ. க. பஞ்சரத்தினம்,
கணபதி பண்டசாலை,
மலைவாசல், தெப்பக்குளம் போஸ்டு,
திருச்சிராப்பள்ளி.



உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# சிவபூஜையகவல்.



திருவாரூர்

ஞானப்பிரகாச பட்டாரகர்

அருளிச்செய்தது.



இது

எட்டயாபுரம் சமஸ்தான வித்வான்

திருமயிலை, வி. சுந்தரமுதலியாரவர்களால்

பார்வையிடப்பட்டு,

சென்னை:

மதராஸ் ரிப்பன் அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டது.

1911.

விலை அணா 1.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# சிவபூஜையகவல்.

காப்பு.

வெண்பா.

ஓசைச் சிவாகமத்தி னுள்ளபடி கண்டமைத்த
பூசைத் திருவகவல் போற்றவே—யாசில்
பொருணயமுஞ் சொன்னயமும் போதத்து நல்கக்
கருணைபொழி வாரணமே காப்பு.

## சூரியபூஜை.

திருவுறு செல்வமுஞ் சிறந்தமெய்ப் புகழும்
பெருகுமெய்ஞ் ஞானமும் பெற்றிட வேண்டிப்
புத்திசேர் சூரிய பூசை புரிவோர்
அத்திர பஞ்சரத் தகத்தின ராக
5 மண்முத லாக மாயையி றாக
வெண்ணுறுதத் துவமனைத் திகலறக் கடந்தே
மிக்குள சுத்த வித்தையின் வடிவெனத்
தக்கதோர் பூசைத் தானத் தடைந்தே
கூறுப கரணங் குறைவற வமைத்தபின்

## சிவபூஜையகவல்.

10 பூருவ முகமுறப் பூசைசெயும்படி
அத்திர மந்திரத் தங்கை புறங்கைகள்
சுத்திசெய் தத்தத் துணைதனைக் கூட்டி
மருவிய சூரிய மந்திர மதனாற்
பெருவிர லிரண்டும் பிணிக்கவுள் வைத்தே
15 இதயமந் திரங்கொண் டிணைப்பெரு விரல்களை
விதமுறு தர்ச்சனி விரல்களா லூன்றிச்
சிறுவிரல் முதலாய்ச் சிரஞ்சிகை கவச
முறுவிரன் மூன்றினு முறைப்பெரு விரலான்
நிசித்தவசம்பி னேத்திர மதனால்
20 வசித்திரு தர்ச்சனி மத்திம மடக்கிப்
பொருவில விணையாற் பிறங்குதர்ச் சனிகளை
மருவிய வத்திர மந்திரத் தியற்றிக்
கவசமந் திரத்தாற் கரங்களைச் சுற்றி
அவனது மூலத் தகங்கைகள் கூட்டிக்
25 கரங்கியா சந்தனைக் கவின்பெற வியற்றி
புறமிக மூலந் தானுகத்தி பண்ணித்
திகழுற மார்பு சென்னி சிகைகளில்
இதய முதலா வெண்ணுமும் மந்திர
மணிவிரன் முதலா மடையுமூ விரலாற்
30 பணிவுறு நியாசம் பண்ணியதற்பின்
களமுதற் றானங்கள் காட்டுதர்ச் சனிகளை
வளமுறு கவச மந்திரத் தியற்றி
நாடிய தர்ச்சனி நடுவிர லிமிர்த்து
நீடுநேத் திரங்களி னேத்திரங் கொடுத்தே
35 அத்திர மந்திரத் தனுமிகை களினால்
மற்றிடத் தசைத்தல மிரண்டினு மூன்றி

யசைவுறு மந்திரத் தங்கைகள் கொட்டித்
திசைதொறுஞ் செய்து திக்குபந் தனமுங்
கவசங் கொண்டு கருதுதர்ச்சனியால்
40 அவகுண் டனஞ்செய் தாகமெங்குமுற
முந்திய சூரிய மூலமந் திரத்தாற்
சிந்தைகொண் மாகமுந் திரையுங் கொடுத்தே
நேரியாங்கதி யாசத்தாற்றனைச்
சூரியன் றனது சொரூபம தாக்கிப்
45 பைமணிச் சென்னிறப் பாத்திரந் தன்னிற்
செய்மலர் முதலாந் திரவியம் பொருந்திச்
செழும்புன னிறைத்த தரிசனர்க் கியத்தை
முழுந்தா ளூன்றி முடியள வெடுத்து
மூலமந் திரத்தான் முன்னுறக் கொடுத்தே
50 மாலற வவன்றன் மந்திரஞ் செபித்தே
அத்திர சுத்திசெய் தமர்ந்தபாத் திரத்தில்
வைத்திடு கடோர்க்க மந்திர மதனான்
மென்னுத லருண விந்துவி னமுதெனத்
தன்னிகர் பரிமளத் தண்புன னிறைத்தே
55 அருணன்மூலத்துட னங்கமா றமைத்துக்
கருணையோ டத்திர கவசமந் திரங்களிற்
றிக்குபந் தனத்துடன் றிகழவ குண்டனந்
தக்கவா றியற்றித் தரணிமூலத்தான்
முன்னிய தேனு முத்திரை கொடுத்தபின்
60 றன்னையும் பூசைத் தானத் துடனே
யுளம்பெறு பூசை யுபகர ணங்களைத்
துளங்குமந் திரங்கொடு சுத்தி புரிந்தே
தாங்கெழிற் பூசைத் தானந் தன்னை
ஓங்குமத் திரம்பயி லொருமலர் தன்னாற்

# சிவபூஜையகவல்.

65 சுற்றிவிக் கினம்பல துருசற விடுத்தபின்
நற்றிய வேதிகை நடுவுற வமைத்திடுஞ்
செம்பொனுதிகளாற் செய்திடு மெட்டிதழ்
உம்புயர் தன்னி லருச்சனை செயும்படி
வனப்புறு நிருதி வாயுவீசானம்

70 அனற்றிசை யென்னு மடைவுநாற் றிசையினும்
பெருக்குறு தண்டி பிங்கலன் கணபதி
குருக்களிங் கவர்தமைக் குணம்பெறச் சாத்திப்
புகல்நடு விற்பிர பூதாசனந்தனை
யகமகிழ்ந் தருச்சித் தனற்றிசை முதலாய்த்

75 தருமெழில் விமலன் சாரணு ராத்தியன்
பரம சுகனெனும் பாதசிங் கங்களும்
பன்னுபீடந்தனிற் பத்மா சனமும்
பொன்னலர் கொண்டு பூசனை செய்தபின்
கீட்டிசை யிதழ்முதற் கிளரித மெட்டினு

80 மீட்டிய கன்னிகை யீசா னத்தினு
மொய்த்திரு தீப்தை முதலா மொன்பது
சத்திகள் தம்மையுந் தகைபெறச் சாத்தி
விற்புற முத்திரை விதமுறக் காட்டி
அற்புத மலர்நடு வர்க்கா சனத்தையுந்

85 திருந்திட வருச்சனை செய்தாங் கதன்மேற்
பரந்திடு வெண்ணிறப் பங்கயா சனமுஞ்
சென்னிற மண்டலந் திகழ்திரு மேனியுந்
தன்னிரு கரத்து வெண்டா மரைமல
ரொருதிரு முகத்தொளி ருபயலோசனமும்

90 அருணவாடையும்பயி லருணன் வடிவினைக்
கருத்துற நினைந்து கடோர்க்கமந் திரத்தால்

இருத்திய பின்ன ரிருவிரல் கொண்டே
நேத்திரங் கொடுத்து நிறைதரு மலர்கள்
ஆர்த்தவஞ்சலியி லருணாயிந்துவிறுங்
95 கரந்தனில் வாங்கிய கதிரவன் றன்னை
வரந்தரு மூல மந்திர மதனான்
மெய்தரு மிதைய மீதிலாவாகனஞ்
செய்துதாபனத்தொடு சிறந்தசன்னிதானஞ்
சன்னிரோதனமிவை தகைபெற வியற்றி
100 முன்னிய விம்ப முத்திரை காட்டித்
தருமெழி னேத்திரந் தவிரவஞ் சங்கமு
முராமுதற் காரந்த முறைநியா சம்பணி
மிக்கமூலத்தால் விருப்பொடு கூட்டித்
திக்குபந்தனத்தொடு செய்தவகுண்டனம்
105 ஆர்த்தமூலத்தா லாவின்முத் திரையொடு
சேர்த்திடு மகாமுத் திரையுங் கொடுத்தே
முறைபுகழ் கடோர்க்க மந்திர மதனான்
அறுகல ரிசி யடைவுறச் சாத்தி
மருவிய கடோர்க்க மந்திர மதனாற்
110 கருதிய வெண்ணெய்க் காப்புமாக் காப்பிவை
அடையினி லளித்தாங் கபிடேகித்தே
படைசெவ் வாடை புனைந்தவை நினைந்தே
சந்தனங் குங்குமந் தாமரைப் போதொடு
செந்தொடை மலர்பல சிறந்திடச் சாத்திச்
115 செங்கதிர் மந்திரஞ் செபத்தொடு முக்கால்
அங்கெதிர் புஷ்ப வஞ்சலி செய்தே
கொண்டிரு மருக்கியங் கொடுத்தவதற்பின்
முண்டக விம்ப முத்திரை காட்டித்
திருந்துமங் கங்களைத் திருமேனியி லுறப்

120 புரிந்துல யாங்க பூசனை புரிந்தே
கூறில யாங்கங் கொடுத்திட வாங்கிச்
சிரிதயஞ்சிரஞ் சிகைகவசங்களை
யிருமைகொ ளங்கி யீசன் றிசையுடன்
நிருதிவா யுக்களி னிறைபெறச் சாத்தி
125 யிலங்குநேத் திரங்கதி ரெதிர்பெறச் சாத்தி
நலங்கொள்கீழ்த் திசைமுத னாற்றிசை தன்னினுந்
தருகிய வத்திரந் தன்னையுஞ் சாத்தி
இருதய முதனான் கிசைந்திடு நேத்திர
மேவுமந் திரமென விளங்குமூ வகைக்குந்
130 கோவின்முத்திரையொடு கோவிடாணமெனு
முத்திரை திராசனி முத்திரை யெனுமிவை
யத்தகு மவைக ளடைவினிற் கொடுத்தே
முன்னிய கீழ்த்திசை முதலித மெட்டினுந்
தன்னிகர் சோமன் றனைமுத லாகக்
135 கேதுவீ றுன கிரகமெட் டினையும்
ஓதிய வடைவினி லுறைந்திடச் சாத்திக்
கரந்தனி லுறுநமஸ் காரமுத் திரையுடன்
அருந்துநல் லருக்கிய மவர்தமக் குதவிப்
படைக்குநைவேத்தியம் பானீயத்துடன்
140 அடைக்கா யமுது மருணனுக் குதவித்
திகழ்தரு தூபந் தீப முதலாந்
தருமுப சாரந் தந்த வதற்பின்
அன்புட னாசம னார்க்கியங் கொடுத்தே
முன்புறச் சூரிய மூலமந் திரந்தனை
145 இயன்றன செபித்தபி னிரவிக் குதவிப்
பயின்றிடு தோத்திரம் பற்பல கூறி
யுன்னியட் டாங்க முறமே தினியிற்

பன்னிரு காலும் பணிந்துட னெழுந்தே
மாசறு கடோர்க்க மந்திர மதனு
150 லாசறு பராமுக வர்க்கியங் கொடுத்தே
தேவனை சிறியேன் செய்திடும் பிழைகள்
யாவையும் பொறுத்தரு ளெனமுறை வணங்கித்
தயங்குமா றங்கந் தனைமுத லாக
வயங்கிய பலவகை மந்திரத் தொகையினை
155 அத்திர மந்திர மமர்ந்தகாராச
முத்திரை கொண்டு முறைமையி லெழுப்பி
முற்பயில் கடோர்க்க மூலமந் திரத்தால்
எற்பயில் சூரிய னிடந்தனிற் கூட்டி
யுதயமாந் தாண்டனை யுத்துவா சனஞ்செய்
160 திதய மனத்தி லெழுந்தரு ளப்பணி
யினிதமர் வேதிகை யீசா னத்துத்
தனியெழிற் றேஜ சண்டன் றன்னையும்
ஆதன மூர்த்தி யவன்றன் மூலத்தாற்
றீபாதலை கொண்டு பூசனை புரிந்தே
165 அடுத்திடு பாத்திய மாசம னர்க்கியங்
கொடுத்துபின்மாலியங் குறைவினைவேத்தியம்
அவமதி யின்றி யடைக்கா யுடன்பல
உபகர ணங்க ளுதவிய பின்னர்
வருந்து வினைகெட வணங்கியுத்யாபனம்
170 புரிந்திடு சூரிய பூசையின் முறைமையை
நலம்பெறக் கற்பவர் நயப்பொடு கேட்பவர்
நிலம்பெறு புகழொடு நீடுவாழ் பவரே.

சூரியபூஜை முற்றிற்று.

---

# சிவ பூ ஜை.

—:o:—

பூங்கம லத்தயன் புண்டரீ கக்கணன்
ஈங்கிவர் காணரு மிலிங்கம தாகிய
சங்கரன் றனையலர் சாத்துதல் புரிவோன்
அங்கவன் றென்பா லாசனத் திருந்தே
5 ஆசமனஞ்செய் தருங்கர நியாசமும்
நேசமோ டங்க நியாசமுஞ் செய்தே
பாத்திர மத்திர பரிசுத்தி செய்தே
யேத்திடு மிதையத் திரும்புன னிறைத்தபின்
ஓமெனு மந்திர முச்சரித் தெழுகாற்
10 சாமானியார்க்கியந் தனையருச் சித்தே
திக்குபந்தனாதி செய்தாங் கதனாற்
றக்கதுவாரந் தனைச்சுத்தி செய்தே
கீட்டிசைத் துவாரங் கிளருமேற் படிமிசை
வாட்டமில் வடபால் வாரண முகனையுந்
15 தாங்குறு தென்பாற் சரஸ்வதி தன்னையு
மீங்கிவர் நடுவி லிலக்குமி தனையும்
அந்தவாயிலின்வடக் கடுத்ததென் புறங்களின்
நந்திகங்கைகளை நயப்புடன் சாத்தி
வாயிலின் றெற்கு வடக்கடுத் திடவே
20 யேசின்மாகாளன் யமுனையைச் சாத்திப்
பத்திசேர் சிவமயப் பார்வையி னாலும்
அத்திரந் தெறித்த பத்திரத் தாலும்
பாசுபதாத்திரப் பாததா டனத்தினும்
வசில்வான் முதன்மூ விடையூறு தீர்த்துக்

25 கிளர்ந்திடு துவாரக் கீழ்ப்படி நடுவிற்
றுளங்கிய வத்திரத் துவாரபாலகனையும்
நீங்கரி தான நிருதியின் றிசையின்
பாங்குறு வாஸ்து பதியையுஞ் சாத்திப்
பொருந்திடு துவார பூசைசெய் ததற்பின்

30 பரந்திடு மந்திர பஞ்சரங் கருதிச்
சோர்வற வைவகைச் சுத்திசெய் திடவே
நேர்பட வருங்கர நியாசம தியற்றிப்
பாதப் பெருவிரற் பற்றியி ருருவாய்
ஆதா ரத்தை யடைந்தவ தற்பின்

35 உச்சி யளவு மோருரு வாகி
அச்சமி லிதைய மாதியைந் திடத்தினும்
பிங்கலை யிடைகளின் பின்னனூற் றதோமுகப்
பங்கய முகிழப் பஞ்சகம் பொருந்திய
சுழிமுனை தன்னிற் றுளையிடத் தமுதம்

40 பொழிதரு சத்தியின் பூரண நிறைந்தே
ஊங்காரத் துட னுள்ளே வாயுவை
வாங்கி நிறுத்தி மறித்துமே னோக்கி
யம்புய முகைக ளலர்ந்துமே னோக்க
உம்படென் றேதெறித் தற்றசோ டிகையான்

45 மாருதந் தன்னை வலத்தினில் விடுத்துப்
பூரக கும்பகம் புரிந்து மீளவுஞ்
சீருறு மிதையச் செழுந்தா மரையிற்
றாரகை போலத் தகைபெற விளங்கிய
அம்மெனு மெழுத்தா மான்மா வதனைச்

50 செம்மையூங்காரச் சிகையினி லேற்றி
அழுந்திய வாயு வதனைமே னோக்க

பொழிந்தசங்கார முத்திரை யதனால்
அவாவியான்மாவை யான்மமந் திரத்தாற்
றுவாதசாந்தத்திற் சோதியிற் கூட்டிச்
55 சத்தப் பரிசஞ் சதுர்முக னிடத்தினு
மெத்திய விரதம் விண்டுவி னிடத்தினு
முருவங் கந்த முருத்திர னிடத்தினும்
அருவுரு புந்தியோ டாங்கா ரந்தனை
மகேச னிடத்தினும் மனோவிந்துக்களைத்
60 தகாமல மொழிக்குஞ் சதாசிவ னிடத்தினும்
ஐவ ரிடத்தினு மவைசென் றொடுங்கச்
செய்வது சூக்கும தேகசுத் தியதாம்
உடலினிற் றனித்தனி யோரைம் பூதம்
அடைவுறக் குணம்வடி வனைத்தையு நினைந்தே
65 மருவிய வாயுவை வாங்கி நிறுத்தி
விரவமே னோக்கி விடுத்திடும் போதில்
இறைஞ்சிய நிவிர்த்தி யிலாமெனு மெழுத்தை
அறைந்துமண் ணின்குண மைந்தையு நீக்கி
புவந்திடு பிரதிட்டையி லுவீமெனு மெழுத்தை
70 நவின்றுநீரின்குண நான்கையு நீக்கி
யொழிந்தபின் வித்தையி லுரூமெனு மெழுத்தை
மொழிந்தன லின்குண மூன்றையு நீக்கி
யடுத்திடு சாந்தியி லைமெனு மெழுத்தை
யெடுத்துரைத் ததன்குண மிரண்டையு நீக்கிச்
75 சாந்தியா தீதந் தனிலஹூ மெனுமெழுத்
தோர்ந்துரைத் ததன்குண மொன்றையு நீக்கி
மண்முத லைந்தையும் வாயு வனல்புனல்
திண்ணமே தினியொடு சிற்பரா காசம்
இவைகளி லடர்த் திட்டபின் மேனியை

80 அவையவை யின்வடி வாக நினைந்தே
மறம்பொரு மத்திர மந்திர மதனும்
பிறங்கிய வலக்காற் பெருவிரற் றன்னி
லூக்கம தாக வுதித்தவெங் கனலால்
ஆக்கையின் குற்ற மனைத்தையு மடர்த்தே
85 உறுமல பந்த மொழிந்தொரு வெளியாய்ச்
சருவஞனியமாந் தன்மையை நினைந்தே
உய்த்திடு நாடிக ளுள்ளும் புறம்புஞ்
சத்தியி னமிர்த தாரையா னனைந்தே
அகார வுகார மதனொடு மகாரம்
90 பகாத பிரணவப் பாவனை யதனாற்
சித்த மாகிய செழுந்தா மரையிற்
சுத்தவித்தையெனுந் துலங்குமாதனத்தில்
அம்முதல் விந்து வளவா நாற்கலைச்
செம்மைய தாகத் திகழ்பிர ணவத்தால்
95 இலயத்தானத்தி லிக்கசூக்குமவுடல்
நிலைபெற வந்து நிகழ்ந்தமை கருதி
ஐங்கலைப் பிரணவ மாத்மமந் திரத்தாற்
பொங்கிய வாயுவின் பூரகத் துடனே
சூக்கும வுடலிடைத் துவாதசாந் தத்தினு
100 நீக்கியான்மாவை நிலைபெற வைத்தே
யருள்பொழி யமுதா லபிடேகித்தே
நிரைதரு மங்க நியாதஞ் செய்திடச்
சூக்கும சுத்தி தூலசுத்தியெனு
மாக்கையின் சுத்தி யாத்மசுத் தியதா
105 மெண்ணிய முக்குணத் திருநிறஞ் செம்மை
வெண்ணிற மண்டில மீமிசை பயின்.

# சிவபூஜையகவல்.

நாபிகந் தந்தனி னைவிரண் டங்குல
மேவியனுளமிசை வெண்ணிறம்பயில்
போதமா மெட்டிதழ்ப் புண்டரீ கத்துறை
110 சோதிலிங் கந்தனிற் றுவாதசாந் தத்தினு
மாவா கனஞ்செய் தமலனை மஞ்சனம்
பூவாதி யாற்புறம் போலருச்சித்து
விந்துவி னமுதான் மெய்ஞ்ஞா னக்கினி
யுந்திக் குண்டத் தோமம் புரிந்தே
115 வியன்றரு பூசனை வேள்வியி னுள்ள
பயன்றனை முழுதும் பரமனுக் களித்துப்
புருவ நடுவினிற் பொங்கொளித் தாரகை
யுருவுறு சோதியை யுறநினைந் திருந்தே
புறம்பினு மென்பாற் பூசைகொண் டருளென
120 அறம்பெற வேண்டி யனுமதி பெற்றிடு
மந்திரி யாகமு மான்ம சுத்தியு
மிந்த முறைமையி னீசனுக் கியற்றித்
தக்கதோர் பூசைத் தானந் தன்னை
விக்கின நீக்கி வியந்தகாப் புறவே
125 பத்திர மந்திர மதுகொடு முக்காற்
கைத்தலந் தட்டிக் கண்டவெண் டிசையினுந்
திக்குபந் தனமுஞ் செய்தத் திரத்தா
லக்குவ சத்தா லவகுண் டனத்துடன்
மெத்திய கீழொடு மேலு நிறைத்திடு
130 சத்தியின் குழுவுறச் சத்திமந் திரத்தாற்
றேனுமுத் திரையுஞ் சீர்பெற வியற்றித்
தான சுத்தி தன்னையும் புரிந்தே
மருக்கமழ் பாத்திய மருவுமா சமன
மருக்கிய மூவகைக் கமைத்தபாத் திரங்களை

135 பத்திர சுத்திசெய் தங்குசத் தமுதம்
வைத்திடு மிதய மந்திரத் தமைத்தே
நாலா றெட்டென நவிற்றிர வியங்க
ளேலா தொழியி னிசைந்தசந் தனமுடன்
றணைந்திடா தறுகு தண்டுல நறுமல
140 ரிணைந்தபாத் தியமுத லாகிய மூன்றினுட்
பொருவிலா றங்கம் பொருந்துபாத் தியமும்
பிரமமா றங்கம் பிறங்கா சனமும்
தீதற வமைத்தபின் திகழர்க் கியந்தனை
பாதன மூர்த்தி யைம்முக மந்திரஞ்
145 சீலமாம் வித்தியா தேகநேத் திரமுடன்
மூல மிதய முடிசிகை கவச
மத்திர மூல மடைவுமந் திரங்களிற்
பத்தலர் கொண்டு பூசனை புரிந்தே
யிவ்வகை மூவிடத் திசைந்தபாத் திரங்களி
150 லவ்வவ மந்திரத் தபிமந் திரித்தே
திக்குபந் தனாதி தேனுமுத் திரைதரு
மர்க்கியந் தனைக்கொண் டத்திர மதனாற்
றன்னையும் பூசைத் தகுதிர வியங்களோ
டின்னியல் சுத்தி யியற்றிமீண் டவைதனை
155 யறைந்திடுங் கவசத் தங்கையான் மூடிச்
சிறந்திட வபிமந் திரித்திதயத் தா
லழுந்திடுங் கவசத் தவகுண் டனத்துடன்
மொழிந்திடு தேனு முத்திரை கொடுத்தபின்
சுத்திநால் வகைசெயுந் தோயகும் பத்துடன்
160 வத்திர மந்திர மந்திர மதனான்
முந்துறக் கழுவி மொழிந்திடு மிதய

மந்திரங் கொண்டு வடித்தெடுத் தமைத்தே
யார்த்தமஞ்சனந் தனை யருக்கியந் தன்னிற்
றேய்த்திடு மலராற் சுத்திசெய் திப்படி
165 புன்னிய பூசையி னுபகர ணம்பல
துன்னிய திரவிய சுத்திசெய் ததற்பின்
தன்னை தனத்திற் றருஞ்சிவா தனத்தையு
முன்னிய மார்பினின் மூர்த்தி தன்னையுஞ்
சாத்தி நெற்றியிற் சந்தனத் திலதமிட்
170 டேத்தியொண் மலர்கொ டிசைந்தமூலத்தாற்
சிரந்தனி லருச்சனை செய்தே சிவமயம்
பொருந்திடத் தன்பாற் பூசனை புரிந்தே
மாசறு நாவினில் வருபிறப் பிறப்பெனு
மாசூசங் கெட வினைத்துமந் திரங்களு
175 முற்றா தாந்தத் தள்ளொளி பொருந்தச்
சொற்ற மந்திர சுத்தியும் புரிந்தே
தரித்திடு மனந்தன் றருமஞ்ஞானம்
அருத்திவைராக்கி யமைசுவரியத்துட
னேசறு பத்ம மெனுஞ்சடுத் தாசனம்
180 பூசனை செய்து புதியவெண் டுகில்புனை
மிகுமெழின் மஞ்சன வேதிகை தன்னிற்
றருசிவ லிங்கந் தனையுற விருத்தி
முந்திய வாதன மூர்த்தி மூலஞ்
சிக்கைகொ ளிதயஞ் சிரஞ்சிகை கவசம்
185 அத்திர மிவையா லட்ட புஷ்பமுஞ்
சுத்திசெய் தருக்கிய தூபதீபங்கொடுத்
தாய்ந்தவத் திரத்தா லகற்றுநின் மாலியம்
போக்கிடு தண்டிதன் பூசனைக் கமைந்தே
யமைதரு தூபநீ ராட்டிய தன்பின்

190 கமழ்தரு மெண்ணெய்க் காப்புமாக் காப்பு
மஞ்ச ணெல்லி வழுவறச் சாத்திப்
பஞ்ச கௌவியம் பஞ்சாமிர்தமிவை
யாடி யருளிய தன்பினெய் யாட்டி
நீடிய விளவெந் நீராட் டியபின்

195 வில்வபத் திரந்தனை விரவமத் தித்து
நல்லகர்ப் பூர நறுந்துக டிமிர்ந்தே
விருப்புறு செழும்புனல் வெண்டயிர் செந்தேன்
கருப்பஞ் சாறுபாற் கனிச்சா றிளநீர்
அஞ்செழுத் தாலிவை யபிடே கித்தே

200 விஞ்சிய முடிக்கலர் விடாது புனைந்தாங்
கிடையிடை தூயநீ ரிசைநறுந் தூபப்
புடைபயி லட்ட புஷ்பமுஞ் சாத்திப்
பொருந்திய குச்சுப் புற்கவ சத்தாற்
பரிந்துசாத் தியபின் பதாகைமுத் திரையால்

205 அதிகமா மூலத் தைமுறை யாட்டித்
பதினொரு மந்திரம் பகர்ந்தினி தாட்டி
மிகுந்திடும் வியோம வியாபிமந் திரத்தாற்
சகத்திர தாரைத் தண்புன லாட்டித்
தண்ணறும் புனலொடு சந்தனக் குழம்பும்

210 நண்ணிய பனிநீர் நயப்புட னாட்டித்
தவலறு சுகந்த சந்தன திகள்பயில்
நவகல சங்க ணயப்புட னாட்டி
யிங்கிப் படிச்செய் திதயமந் திரத்தாற்
சங்கத் தருக்கியத் தண்புன லாட்டி

215 யாசறு திருவொற் றுடைபுஞ் சாத்தி
யீசனைப் பீடத் தெழூந்தரு ளப்பணி

# சிவபூஜையகவல்.

மன்னுமைங் கரன்றனை வாயுகோ ணத்தினு
முன்னுசெந் திருவினை யுத்தர திசையினு
மத்தகு பீட தகைதசா வியத்திற்
20 சத்த குருக்க டம்மையு மடைவே
திரம்பெறச் சாத்தித் தென்றிசை முகமுறப்
பிறங்கிய விலிங்க பீடத் திலகீழ்
ஆதார சத்தி யனந்தா சனத்தொடு
மீதா மனந்தனை மிசையுறச் சாத்திப்
25 பொருந்தகை யுறுமணிப் பீடக் கால்களிற்
றிருந்திய வங்கி திசைமுத னான்கினுந்
தருமமுத னான்கருகுறச் சாத்தித்
திருமரு வியகீழ்த் திசைமுத னான்கினு
முறைதரு வதன்ம முதனான் கமைத்தே
30 யுறையதச் சதன மூர்த்துவச் சதனம்
வதுமில் திருதி யிரணிற் சாத்தி
மீதமா கந்தம பீச மங்குரம்
தன்மை நாளந் தாதுகன் னிகைவிதை
பன்மை யுறுப்புறு பத்மா சனத்தையுந்
35 நிமையிற் கேசரஞ் செறியித ழெட்டினும்
வாமை முதலெண் வகைச்சத் திகளுடன்
இடமுறு கர்ணிகை யீசா னத்திற்
றடமுலை மனோன்மணி தன்னையுஞ் சாத்தி
யிதழ்நுதி வட்டத் திரவிமண் டலத்தையும்
40 அதனதி பதியா மயனையுஞ் சாத்தி
நுண்டரு கேசர நுதியினின் மதியின்
மண்டலந் தன்னொடு மாயனைச் சாத்தித்
தாங்கிய கர்ணிகை தருநுதி வட்டத்
தோங்கநன் மண்டலத் துருத்திரன் றனையுந்

245 தயங்குகர் ணிகைநடுச் சத்திமண் டலத்து
வயங்கதி பதியா மகேசன் றனையும்
சிவாதனத் தனையுஞ் சிவமூர்த் தியையுந்
தவாததன் மீதிற் சாத்திய பின்னர்
பிரமுதற் பதாங்கந் தெண்டபங் கியினான்

250 முரணிலீசான முதனியா சப்பணிச்
சத்தியோ சாதந் தனைமுத லாகப்
பத்திசேர் முண்ட பங்கியு மமைத்தே
பங்கபா சனமும் பானிற மேனியும்
பொங்கர வணைத்த பொற்புரி நூலுந்

255 தெண்கலை வெண்பிறை திருமுடி யைந்துங்
கண்கள்மூ வைந்துங் கரங்களீ ரைந்தினின்
மலைதரு சூலம் வச்சிரங் கதிர்வாள்
கொலைமழு வபயங் கொண்டு வலப்பால்
அரவொடு பாச மதிர்மணி வெங்கனல்

260 விரவிய வங்குச மேவிடப் பா
லுறைந்திடுஞ் சதாசிவ வுருவினை நினைந்தே
சிறந்திடும் வித்தியா தேகமா வாகித்
தடுத்த திருமுக மைந்தினு நேத்திரங்
கொடுத்தபி னறுமலர் கொண்டவஞ் சலியால்

265 உருத்திடு தினகர வொளிபயில் பிரணவ
மதித்திடு மூல மந்திர மதனாற்
சுழுமுனை யொலியொடு துவாதசாந் தத்து
ளெழுமொரு சோதியை யிறக்கி விந்துவிற்
சந்திர கோடி தருமொளி கரத்தில்

270 வந்திடப் பிராண மார்க்கந் தன்னிற்
சத்தியோ சாதந் தன்னிலா வாகித்

# சிவபூஜையகவல்.

தத்தகு வாம மாதிமூன் றூலுர்
தாபன சந்நி தானசன் னிரோதன
மேவிடக் கொடுத்தே விமலனைச் சுவாகத
மன்பொடு வினவி யருள்பெற் றகிலமும்
இன்பொடு காக்கு மிறைவனா னுன்னைச்
செவ்விய பூசை செய்திடு மளவு
மிவ்வி லிங்கத் திருந்தரு ளென்றே
யிறைவனை வேண்டி யீசா னத்தா
லுறைதரு சுவாகத வருக்கியங் கொடுத்தே
சித்தமா மிதையஞ் சிரஞ்சிகை கவசம்
அத்திர முரமுத லங்கையி றமைத்தே
யேற்றமூ லத்தா லேகத்துவம் பெறச்
சேர்த்திரு கரத்தாற் றிக்குபந் தனமுட
னவகுண் டனஞ்செய் தாவின்முத் திரையுடன்
சிவனெதிர் மகாமுத் திரையுங் கொடுத்தே
கதிதரு காளகர் ணிகையி லிங்க
முதிர்நமஸ்கார முத்திரை தன்னுடன்
முறைதரு மைம்முக முத்திரை காட்டி
யுறைதரு பாத்திய மாசம னார்க்கியம்
ஆலமூண் டவனுக் கலரறு கரிசி
மூலமந் திரத்தான் முறைபெறச் சாத்தித்
தூயமூ லத்தாற் றூபமுங் கொடுத்தே
யாயவா சமன மருக்கிய முதனீ
5 நிருத்தனுக் கெண்ணெய் நெல்லிமாக் காப்புக்
கருத்தினு லடைவுறக் கருதியாட் டியபின்
ஆர்த்திடு மருக்கியத் தமிட்டே யித்தே
பாத்திய முதலன பரிவுற நல்கி
மருவுநன் றுகிலான் மாற்றிய பின்னர்

300 தருபல சுகந்த சந்தன மறுகு
வில்வ மலரொடு வியங்கொளா பரணம்
நல்லபொற் றுகின்மன நயப்பொடு சாத்தி
முன்புறத் தத்துவ மூவகை மந்திரத்
தன்புறப் புட்ப வஞ்சலி செய்தே
305 சூட்டி யின்னடை தொடைநறு மாலை
யாட்டி யொலிமணி யத்திர மதனாற்
றேசுறு தூப தீபமுங் கொடுத்தபின்
ஆசமனத் துட னருக்கியங் கொடுத்தே
மூர்த்திய மனோரத முத்திரை காட்டி.
310 யைந்து பிரம மங்கமா றென்னும்
இங்கிவை லயாங்கத் தெழில்பெறச் சாத்திப்
பொங்குபோகாங்க பூசனை புரிதற்
காதர வியம்பி யனுமதி பெற்றே
யோதுமூ லத்தா லொருமலர் சாத்திக்
315 கிளர்ந்தவீசானங் கிழக்கொடு தெற்கு
விளங்கிய வடக்கு மேற்றிசை யிவைகளின்
மொழியுமீசான முதலோ ரைந்தையும்
பொழிநறு மலராற் பூசித் ததற்பின்
இயலுறு நேத்திர மீசன் றிசையினும்
320 அயலுறு விதய மங்கித் திசையினும்
ஈசா னத்தி லெழிற்சிரந் தனையும்
தேசார் நிருதியிற் சிகையது தனையுங்
காட்டிய வாயுவிற் கவசந் தனையுங்
கிட்டிசைதெற்குக் கிளர்மேற் குத்தரம்
325 அருந்திசை நான்கினு மத்திரந் தனையும்
இருந்திடு மீச னிலயாங்கந்தொறும்

அடைவினில் வாங்கி யத்திசை யிதழ்களின்
புடையுற விருத்திப் பூசனை புரிந்தே
ஆன வருக்கிய மடைவினி லுதவித்
330 தேனு பத்மந் திரிசூ லத்தொடு
தூய மகர சுருக்குமுத் திரையிவை
யாயவீசான மாதியைந் தினுக்குங்
செங்கரங் குவித்திடு சிறந்த முத்திரை
யங்கமா றுக்கு மடைவினி லளித்துப்
335 புகலுமூ லத்தாற் புட்பவஞ் சலியுந்
திகழ்தரு மகாமுத் திரையுங் கொடுத்தே
யீசனுக் கபேத மிவனெனத் தூபம்
ஆசம னத்துட னருக்கிய மளித்தே
யீசன் றிசையி லிசைந்திடுங் கௌரியை
340 யாசன மூர்த்தி யாதியிற் சாத்தி
நானு விதந்தரு நைவேத் தியந்தனைப்
பானீ யத்தொடு பரிகல மேத்தி
நிகழ்தரு மிவைகளை நிரிக்கணமுதலாந்
துகளறு நால்வகைச் சுத்தியுஞ் செய்தே
345 திரமுறு கௌரிதன் செங்கையிற் கொடுத்தே
யரனைமூ லத்தா லமுதுசெயப் பணிப்
பிரமாங் கங்களைப் பிரிவறக் கருதிப்
பரிகல மொன்றினிற் பரிந்தமு தளித்தே
யாசமனங்கொடுத் தங்கைகடு வட்டி
350 வாசமோ டடைக்காய் வகைபெற வுதவித்
தந்திடு மருக்கியந் தன்னொடு மூல
மந்திரங் கொண்டு மருமலர் சாத்தித்
தூபமு நால்வகைச் சுத்திநேத் திரந்தரு
தீபமுங் கொடுத்துத் திகழுமா சமனம்

355 அருக்கிய முதவி யலர றுகரிசியிற்
றருக்கிய சருவ தத்துவா திபனெனப்
பகருமூலத்தாற் பவித்திரஞ் சாத்தி
நிகரிலா லத்திரின் நிகழ்பரா சத்தியை
முன்னுற வாதன மூர்த்திமூலங்கள்

360 அன்னவை சாத்தி யருக்கியங் கொடுத்தே
சுத்தி பொருந்திய தூபதீபங்கொடுத்
தத்தனைக் கவசத் தங்கையாற் சுற்றி
மிருகமுத் திரைபயில் வெண்ணீ றதனால்
அருகுற முக்கா லமலனைச் சூழ்ந்தே

365 வெண்ணுமா லத்தி யிடந்தனி லுய்த்தபின்
அண்ணலுக்காசம னர்க்கிய முதவி
நீறுகண் ணாடி நிகழ்குடை சாமரம்
மாறில்பொன் னால வட்டமும் விசிறியும்
அவடவினி லருக்கிய மாசமனங்கள்

370 இடையிடை பொருந்த வியற்றிமூலத்தான்
நாதமொ டெழுப்பிய நமோந்தமூலத் தால்
ஆதியைப் புட்ப வஞ்சலி செய்தே
சித்திர மகாமுத் திரையுட னைமுக
முத்திரை தன்னையு முறையுறக் கொடுத்தே

375 யெய்திடு மவருட னிதையத் தருச்சனை
செய்திடு செபவடஞ் செங்கையில் வாங்கி
நாவலுமூ லத்தா னூற்றெட் டுருவினைப்
பவமகன் றிடச்செபம் பண்ணியதற்பின்
கதமுறு மத்திர கவசமோ டிதயத்

380 திதயமுதன் மறித் தெதிர்ச்சம்புடித்தே
யறிந்திடு பிரச்சை யவகுண்ட னத்துடன்

செறிந்திட வலது செங்கையிற் பற்றி
அத்த நிறைத்த வருக்கிய முற்பவ
முத்திரை தன்னொடு முழந்தாளூன்றி
385 யுன்னருஞ் செபத்தையு முற்றகன் மத்தையுந்
தன்னையும் வரதந் தனிலுறக் கொடுத்தே
யங்கித் திசையி லருள்குரு மூர்த்தியிற்
றங்கிய பரசிவந் தன்னையருச் சித்தே
நாடிய மேற்றிசை நண்ணிய யோக
390 பீடமேல் வித்தியா பீடந் தன்னையும்
பூசித் தரனையும் புட்பவஞ் சலியான்
நேசித் தவன்புகழ் நெஞ்சுறத் துதித்தே
யண்டனை வலஞ்செய் தட்டாங்கமுறத்
தெண்டனிட் டிருகரஞ் சென்னிமேற் கூப்பிக்
395 கருத்துறு வுபய காலமா திகளில்
அருச்சனை புரிதற் கசத்தா மவர்தாம்
ஆசன மூர்த்தியோ டரனைமூ லத்தாற்
பூசனை புரிந்து போகாங்களில்
நிறைதரு பிரம நேத்திராங் கங்களை
400 முறைதரு சந்தி முறைமையிற் சாத்திக்
கருத்தா மக்கினி காரியஞ் செய்தற்
குரித்தா மவர்செய் துடனிவே தித்தே
யட்டபுட் பங்கொடுத் தைம்முக முத்திரை
சிட்டனுக் கன்பு சிறந்திட வுதவி
405 சத்தியோ சாதந் தனைமுத லாக
மொய்த்தவை முடியினு மூலமந் திரத்தாற்
பூசனை யருக்கியம் புரிந்த வதற்பின்
ஆசில்போ காங்க மவைதனக் கடைவே
சயம்பெறு மந்திரந் தனைமுத லாக

410 வியம்புமீசான மிறுதிய தாக
வுற்றவ ருக்கிய மொருமையிற் கொடுத்தே
முற்றுநாராச முத்திரை மலரால்
ஆர்த்தமந் திரங்க ளனைத்தையு மெழுப்பி
மூர்த்தியிற் றிவ்விய முத்திரை கொடுசேர்த்

415 தஞ்செழுத் தருச்சித் தருக்கியங் கொடுத்து
வஞ்சனேன் பிழைகளை மனம்பொறுத் தருளெனத்
தொக்கபின் னினைந்து சோதிலிங் கந்தனைத்
திக்குபாத் தனத்துடன் செய்தவ குண்டனம்
முன்கெழு தேனு முத்திரை கொடுத்தே

420 தன்குரு முதலோர் தமக்கும் பராமுகங்
கூர்த்த வருக்கியங் கொடுத்து விடுத்தே
மூர்த்திசெய் ததற்பின் முனைமழுச் சண்டனை
யாசன மூர்த்தி யவன்றன் மூலத்தாற்
பூசனை செய்து புனைந்தநின் மாலியந்

425 தகைமை வேத்தியந் தான்முத லாயின
வகைபெறக் கொடுத்தவன் மந்திர மதனாற்
செபித்து நிவேதனஞ் செய்திரு கரங்கள்
குவித்தடி யேன்செய் குறைபொறுத் தருளெனக்
குலவிய வருக்கியங் கொடுத்து விடுத்தபின்

430 மலர்பயி லருக்கிய மந்திர மனைத்தையும்
நேர்பெற வாங்கி நெஞ்சகத் தமைத்தே
சோர்வினின் மாலிய சுத்தியும் புரிந்தே
யிருபதங் கழுவி யியற்றியாசமனந்
திருநீ றணிந்து செய்து நியாச

435 மோர்ந்திடு மிருபத் தோருரு வகோரஞ்
சாந்தியின் பொருட்டுத் தகைபெறச் செபித்தபின்

## சிவபூஜையகவல்.

மாசறு கயிலைக்கு வாயுறை கொடுத்துப்
பூசனை செய்திடும் பூசனை முறைமையைச்
சொற்றமி ழகவலிற் சொல்லவேண்டுமென

440 நற்றவ னுலக நாயகன் விளம்பச்
சிற்குண னுரைத்த சிவாகம நோக்கி
நற்கமலையில்வாழ் ஞானப்பிரகாசன்
சொல்லிய பூசைத் தொகையினைப் பழுதற
வல்லவர் வீடுற வல்லவர் தாமே.

## சிவபூசையகவல் முற்றிற்று.

---

திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் திருவடி வாழ்க.

---

உ

சிவமயம்.

# சைவாநுட்டான அகவல்.



திருவாரூர்
ஞானப்பிரகாச பட்டாரகர்
அருளிச்செய்தது.



இது
எட்டயாபுரம் சமஸ்தான வித்வான்
திருமயிலை, வி. சுந்தரமுதலியாரவர்களால்
பார்வையிடப்பட்டு,

சென்னை:
மதராஸ் ரிப்பன் அச்சுக்கூடத்தில்
பதிப்பிக்கப்பட்டது.

1911.

சிவமயம்.

# சைவாநுட்டான அகவல்.

சீர்பெறு மனாதிச் சிவாகமப் படியே
நேர்பெற நித்திய நியமம் புரிவோர்
கதிரவ னெழுமுன் கடிகையைந் தென்ன
மதிபெற வெழுந்து மகேசனை நினைந்து
5 துகளறு சௌச சுத்தி புரிந்தபின்
றகைமைசேர் தந்த தாவனஞ் செய்தே
போந்துநன் னதிமுதற் புனல்களி னாடித்
தோய்ந்துமுன் காய்ந்த துகிலினை யுடுத்து
மூவகைத் தத்துவ முறைதனின் மூக்கா
10 லாவது புரிந்திட் டாசம னத்தையும்
அகரஞ் சுத்திசெய் தந்திர மதனா
லிதயங் கொடுதொடு மிடங்களுந் தொட்டு
வைத்தவெண் ணீற்றின் மந்திரம் பதினொன்
றத்தந் தன்னா லபிமந் திரித்தபின்
15 பெருவிர லணிவிரற் பிடித்தவெண் ணீற்றாற்
சிரமுதற் பரிசனஞ் செய்தத் திரத்தா
லாசா ரத்தினோ டைந்திடஞ் சிரமுத
லீசா னாதிகொண் டிட்டநீ றடைவினில்
அத்தகு மற்றை யங்க மெங்கணுஞ்
20 சத்தியோ சாதந் தனானீ றணிந்தபின்
கரமிசை நீற்றைக் கழுவிய புனலின்

முரணிலீசான முதலைந் தமைத்தபின்
சென்னியிற் றெளித்துச் சிவமந் திரத்தாற்
சொன்னவாசயனந் தொடுமிடம் புரிந்தே
25 மகிழ்ந்திடச் செய்வது மானத நானம்
நிகழ்ந்திட வேகர நியாசஞ் செயும்படி
யத்திரந் தன்னா லங்கை துடைத்துத்
சத்திமந் திரத்தாற் றகைபெறக் கூட்டித்
திருவுறு சிவாதனஞ் சிவமூர்த்தியினும்
30 பெருவிர லிரண்டையும் பிணிக்கவுள் வைத்து
முந்து மீசான முதலைந் தினையும்
ஐந்திடம் பெருவிர லாதியா யமைத்தே
யங்கையில் வளைத்த வங்குட் டங்கொடு
திகழ்ந்திட வித்தியா தேகமு நிசித்தே
35 வகைதெரி நேத்திர மந்திர மதனா
லகமுற நடுவிர லாறையும் வளைத்தே
யுறுபெரு விரலா லுள்ளங் கைகளின்
மருவுறு மூல மந்திர நிசித்துச்
சிறுவிரன் முதலாய் செறிந்தநால் விரலின்
40 முறைதரு மிதய முதனியா சம்பணி
யத்திர மதனா லங்குட் டங்களின்
மெத்திய தர்ச்சனி விரல்களாற் றெறித்துக்
கவசமந் திரத்தாற் கைகளைச் சுற்றி
யவமின்மூலத்தா லமைந்திடக் கூட்டி
45 யிருகர நியாச மியற்றிய பின்னர்
நெருங்கிய வங்க நியாசஞ் செயும்படி
செறிதரு சிவாசனஞ் சிவமூர்த்தியினா
னெறிதரு யார்பினி னியாசஞ் செய்தே
முந்திய சிரமுதன் முழந்தா ளளவா

50 மைந்திலீசான மாதியைந் தமைத்தே
திருத்தகு வித்தியா தேகநேத் திரமிவை
இருத்தாறு மார்பினுங் கண்ணினு மமைத்தே
யறிந்திடு மூலந் தணிவிரல் பெருவிரல்
செறிந்திட மார்பினிற் செய்து நியாச

55 மான்றிடு மிதய மாதிமந் திரங்கண்
மூன்றுமந் தலங்கண் மூன்றினுங் கொடுத்தே
தவராறு புயங்களிற் றர்ச்சனி யதனாற்
கவசமந் திரங்கொடு கவசமு மமைத்தே
ஓங்கணி விரலி னுள்ளங் கைகளி

60 லாங்குற வத்திர மதுகொடு நிசித்துத்
தக்கைத் தலங்கொடு தாளத் திரயமுந்
திக்குபந் தனமுஞ் செய்தத் திரத்தா
லாய்ந்திடு கவசத் தவகுண் டனமும்
வாய்ந்தமூலத்தான் மகாமுத்திரையும்

65 அங்க நியாசமு மடைவினிற் செய்தபின்
பொங்கிய மார்ச்சனம் புரிந்திடு மாறு
வாட்டமில் பதினொரு மந்திர மதனு
லீட்டிய பிராணா யாம மியற்றி
யாங்குறு விந்துவி னமுதிக யத்தால்

70 வாங்கியே புனலின் வைத்துமூ லத்தாற்
சிறந்தவத் திரத்தாற் றிக்குபந் தனமு
மறந்தரு கவசத் தவகுண் டனமுஞ்
சித்திர மான தேனுமுத் திரைமகா
முத்திரை மூலத் தானு முடித்துக்

75 கலைமகன் கமலை கௌரியிங் கவரைத்
தலைமைமுச் சந்தியுந் தனித்தனி நினைந்தே

வரமிகு பதினொரு மந்திரத் தப்புனல்
சிரமிசைக் கும்பமுத் திரையாற் றெளித்தே
யாசற மீளவு மப்பதி னொன்றன்
80 மாசறு புனலை வலக்கையில் வாங்கி
யகமுற விடக்கை யமைத்ததில் வீழ்புனல்
பகல்பதி னொன்றாம் புரோக்கித் ததும்பி
னின்றமெய்ப் புனல்வலம் சேர்பெற வாங்கி
நன்றிகொ ளிடது நாசியி னிடத்தாற்
85 றன்றியுட் புகுந்து தாங்கிடத் தன்பான்
மன்னிய வல்வினை மைக்குளம் பெனவே
நாடிய வலது நாசிகை யாற்புறத்
தோடிவீழ்ந் தெனநினைந் துற்றவப் புனலைத்
திண்ணிய வச்சிரச் சிலையுரு வாக
90 வெண்ணிய வலப்புறத் தெறிவிடத் துய்த்தே
கருதுமாசமனங் கரநியாசத் தொடு
நிறைகரு மங்க நியாசமுஞ் செய்து
மன்னிய கவச மந்திர மதனாற்
றன்னைமெய்ப் புனலாற் றகைபெறச் சூழ்ந்து
95 சூரிய விடத்திற் சுத்தனை நினைந்தே
சீரிய காயத் திரியுடன் மூலந்
தற்பண மும்முறை தனித்தனி செய்தே
யற்புத ஜெபமீ ரைந்துசெய் ததனி
லதிகமொவ் வொருக்கா லருக்கியங் கொடுத்தும்
100 பதினொரு மந்திரம் பகர்ந்துதர்ப் பித்துச்
சூரிய மந்திரந் துகளற முக்கால்
வாரியிற் றருப்பணம் வகைபெற வுதவி
மந்திரந் தேவர் வகைபெறு மிருடிக
ளந்தமின் மனுக்க ளடைவுறு பூதர்க்கு

105 தந்தைதாய் ஞாதி கடன்குரு விவர்க்கு
முந்திய தருப்பண முறைமுறை செய்தே
வேண்டிய மந்திரம் வேறுஞ் சிலபல
பூண்டிரு தருப்பணம் புரிந்து விதிப்படி
தங்குமா சமனந் தருகர நியாசமு

110 மங்கநி யாசமு மடைவினிற் செய்தபின்
மருவியே புனலின் வைத்திடு மமுதைப்
புருவ நடுவினிற் பொருந்திடக் கூட்டி
மூல மந்திர முறைபெறச் செபித்தே
சூலபாணி யனைத் தொழுதடி வணங்கி

115 நற்புகழ் கமலை ஞானப் பிரகாசன்
அற்புத மாகிய வாகமப்படியே
நயவன் புடனே நவிலும் விதிப்படி
நியமம் புரிவோர் நீடுவாழ் பவரே.

## சைவாநுட்டான அகவல் முற்றிற்று.

---

ஞானசம்பந்தமூர்த்தி[illegible]யனார் [illegible]ருவடி வாழ்க.